# பல் முளைக்கும் பிராயமா?

## வேதனையின்றி இலகுவாகப் பல் முளைக்க உதவுவது பிரமிட் பிராண்ட் கிளிஸரின்






**பல்** முளைக்கும் பிரச்னையா? புண்பட்ட ஈறுகளா? மென்மையான துணியொன்றை உங்கள் விரல்மீது சுற்றிக்கொண்டு பிரமிட் கிளிஸரினில் நனைத்தெடுத்து குழந்தையின் ஈறுகள்மீது இலேசாகத் தேய்த்திடுங்கள். அது சட்டென்று குணமளிப்பதுடன், சிறுவர்கள் ரசிக்கும் இனிய சுவையுள்ளது. மருத்துவத்திற்காகவும், அழகுசாதனங்களுக்காகவும், பருவகாலங்களுக்காகவும் பயன்படும் சுத்தமான பிரமிட் கிளிஸிரினுக்குப் பற்பல வீட்டு உபயோகங்களும் உண்டு.

**இலவச** துண்டுப் பிரசுரம்! இக்கூப்பனைப் பூர்த்தி செய்து "இந்துஸ்தான் லீவர் லிமிடெட், தபால் பெட்டி நம்பர் 409, பம்பாய்" என்ற விலாசத்திற்கு அனுப்புங்கள்.

பிரமிட் கிளிஸரினின் வீட்டு உபயோகங்களை விவரிக்கும் இலவசத் துண்டுப் பிரசுரம் ஒன்றை அனுப்பவும்.

| என் பெயரும் விலாசமும் | நான் கிளிஸரின் வாங்கிய மருந்துக் கடையின் பெயரும் விலாசமும் |
| --- | --- |
| ........................................ | ........................................ |
| ........................................ | ........................................ |
| ........................................ | ........................................ |

KWM

... பம்பாய், கல்கத்தா, டில்லி, சென்னை PYG 12-58 TM

## போலீஸ் நூற்ருண்டு விழா




டைரக்டர்கள் பணம் கொடுத்ததில் குற்றமில்லை என்று நீதிபதி தீர்ப்பு சொல்லிவிட்டார்!

ஆனல் இப்போது சர்ச்சைக்குரிய விஷயம், ரூபாய் ஐம்பதினுயிரத்தைப் பெற்றுக் கொண்டு சிமிட்டி கம்பெனியின் வளர்ச்சிக்குத் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியினர் எப்படி உதவினுர்கள்; இன்னும் எப்படி உதவப் போகிருர்கள் என்பதுதான். சர்க்காரைக் கொண்டுதானே உதவ முடியும்? இப்படி உதவுவதுதான் சோஷலிஸமா?

இப்படியொரு பெருந் தொகையைப் பெற்றுக் கொள்ளும் அரசியல் கட்சி, ஏழைகளின் கட்சியாகுமா? இத்தகைய கட்சியினர் சுதந்திரக் கட்சியைப் பணக்காரர்களின் கட்சி என்று பிரசாரம் செய்து வருகிருர்களே அதில் ஏதாவது உண்மையோ, நேர்மையோ இருக்கிறதா?

நீதிபதி மேற்கண்ட தீர்ப்பு அளித்ததற்கு கம்பெனியின் யதாஸ்தில், "தேசிய அல்லது மற்ற 'இன்ஸ்டிடியூஷன்'களுக்கு நிதி உதவி அளிக்கலாம்" என்று ஒரு விதியிருப்பது காரணம். தேர்தல்களில் அபேட்சகர்களை நிறுத்தி, தேர்தலுக்காகப் பணம் செலவு செய்யும் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியை ஒரு தேசிய இன்ஸ்டிடியூஷனுக நீதிபதி கருதியிருக்கிருர்.

ஆனல் இன்ஸ்டிடியூஷன் என்ருல் பள்ளிக் கூடங்கள், கல்லூரிகள், ஆஸ்பத்திரிகள் இவை போன்றவைகளைத்தான் குறிக்கும் சாதாரணமாக யாரும் எண்ணுவார்கள். அபேட்சகர்கள் போட்டியில் தங்களுக்கு வேண்டியவர்களுக்கு உதவி செய்யும் அரசியல் கட்சிகளையல்ல என்பது யாருக்குமே தெரியும். எனினும் நீதிபதி மேற்கண்டவாறு தீர்ப்பளித்திருக்கிருர். ஆயினும் நமது நோக்கம், நீதிபதியின் தீர்ப்பை விமரிசனம் செய்வதல்ல. நீதிபதியின் தீர்ப்பிலிருந்து வெளியாகிய அடிப்படை விஷயங்களைக் குறிக்கவே இதை எழுதிருேம்.

சிமிட்டி கம்பெனிக்கு லாபம் வீடு கட்டுவோர் சிமிட்டி வாங்கியதிலிருந்து கிடைத்தது. ஆனல் வீடு கட்டுவோர், சிமிட்டிக்கு மட்டும் பணம் செலுத்தவில்லை; தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்கும் செலுத்தியிருக்கிருர்கள். ஒவ்வொரு காங்கிரஸ் அபேட்சகர்களின் தேர்தல் செலவுகளுக்காக மறைமுகமாக வரி செலுத்தியிருக்கிருர்கள் என்பது இதிலிருந்து தெரிகிறது.

இப்படி இந்த ஒரு வர்த்தக ஸ்தாபனம் மட்டுமல்ல; இன்னும் எத்தனையோ ஸ்தாபனங்கள் காங்கிரஸின் தேர்தல் செலவுகளுக்கு நிதி செலுத்தியிருக்கின்றன என்பது வெளிப்படை. இந்த ஸ்தாபனங்கள் மற்றக் கட்சிகளுக்கும் சட்டப்படி உதவலாமே என்று கூறலாம். ஆனல் இன்று நமது கண்ட்ரோல்கள் வைத்து நடத்தும் சர்க்கார் காங்கிரஸ் சர்க்காராக இருப்பதால் மற்றக் கட்சிகளுக்கு இல்லாத சௌகரியம் அதற்கு உண்டு. வர்த்தக ஸ்தாபனங்கள் பயந்து ஆளும் கட்சிக்குத்தான் உதவுவார்கள்.

அரசியல் கட்சிகளுக்கு வழங்கினல் அத் தொகைகளையும் கட்சிகளையும் நாடறியப்





புதுடில்லி விஞ்ஞான பவனத்தில் ஆகஸ்டு மாதம் 23-ந் தேதி காஷ்மீர் வெள்ள நிவாரண நிதிக்காக ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது. கூடி இருந்த அனைவரும் இசையைக் கேட்டு அனுபவித்ததுடன் ஒரு நல்ல காரியத்துக்கு உதவிய மனநிறைவும் பெற்று மகிழ்ந்தார்கள். கச்சேரிக்கு உதவி ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதா கிருஷ்ணன் தலைமை வகித்து ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் திறமை யையும் நல்ல காரியங்களுக்கு உதவும் அவரது உயர்ந்த பண்பையும் வெகு வாகப் பாராட்டினார். பாரதப் பிரதமர் நேருஜி வருகை தந்து கடைசி வரையில் இருந்து சிறப்பித்தார். வலது புறம் நேருஜி கச்சேரிக்கு வரு வதையும் அவருக்குப் பக்கத்தில் ஸ்ரீமதி அருணா ஆஸப்அலி, ஸ்ரீமதி ஷீலா பரத்ராம், ஸ்ரீமதி ருக்மிணி தேவி ஆகியோரையும் காணலாம்.





திரு எம். எஸ். துரைசாமி அவர்களும், திருமதி கமலம் துரைசாமியும்

அழியாச் செல்வமாகிய கல்விச் செல்வத்தைப் பெருக்கும் பெரு நோக்குடன் இலங்கையில் கண்டிக்கு அருகிலுள்ள தெனுநுவரையைச் சார்ந்த கந்தன்வத்தை எஸ்டேட் அதிபரான கொடைவள்ளல் திரு எம். எஸ். **துரைசாமி** B. A., J. P. அவர்கள் தமது சொந்த ஊராகிய மேலூர் தாலுகா சந்தம்கோவில் பட்டியில் உள்ள மதுரை மாவட்டக்கழக சந்தம்கோவில் பட்டி துரைக்கமலம் உயர்நிலைப் பள்ளிக்கு ரூ. 60,000 செலவில் ஒரு புதிய கட்டடம் கட்டிக் கொடுத்திருக்கிறார். செய்யடாகிய இலங்கையில் கண்டிக் கருகில் யோகிராஜ் சச்சிதானந்த சுவாமிகளின் பெயரால் தபோவனம் ஒன்றைப் பல்லாயிரக்கணக்கான ரூபாய் செலவில் நிறுவி ஆத்மதானம் செய்ததோடன்றி இப்போது தமது தாய்நாட்டில் இக் கல்வி தானமும் செய்ய முன் வந்திருக்கிறார்!

மேற்படி கொடை வள்ளலின் உதவியால் கட்டப்பெற்ற புதிய கட்டடத்தை 25-8-1959ல் சென்னை மராமத்து அமைச்சர் திரு கக்கன் அவர்கள் தலைமையில் மின்சார அமைச்சர் திரு வி. இராமையா அவர்கள் திறந்து வைத்தார்கள். மதுரை மாவட்டப் பிரமுகர்களும், பொதுமக்களும் திரளாக வந்து சிறப்பித்தார்கள்.

பெரியவர் தமக்குள் நகைத்துக் கொண் டாரே தவிர, தாம் அங்கு வந்திருந் ததைச் சொல்லவில்லை. "இருக்கட்டும்; வா! நான்தான் அந்தப் பேழையை எடுத்து வைத்திருக்கிறேன்."

"தாத்தா!"

"நீ மதிலுக்கு வெளியே நிற்பதைக் கண்டவுடன் நான் பேழையை எடுத்துக் கொண்டு திரும்பி விட்டேன். நல்ல வேளை! நீ பத்திரமாக அவனைக் கொண்டு வந்து சேர்த்து விட்டாய்!"

பேழை இருக்கும் செய்தியைக் கேள்வி யுற்றவுடன் துள்ளிக் கொண்டு எழுந் தான் இளங்கோ. வல்லவரையரின் இரு கரங்களையும் இறுகப் பற்றிக்கொண்டு, "போன உயிர் திரும்பி விட்டது, தாத்தா!" என்று குதித்தான்.

வல்லவரையர் படுத்திருந்த இடத்துக்கு அருகில் தூணின் அருகில் அந்தப் பேழை இருந்தது. அதைத் தூக்கிக் கொண்டு தூரத்தில் இருந்த தீவர்த்தியின் ஒளியை நோக்கி ஓடினான். படபடக்கும் நெஞ்சத் தோடு திறந்தான். அதற்குள்ளே பள பளவென்று கண்ணைப் பறிக்கும் ஒளி யோடு ஒரு முடி, உடைவாள் ஒரு முத்தாரம் இவ்வளவும் இருந்தன.

அவ்வளவுதான்! இளங்கோ ஆனந் தம் தாங்காமல் கூத்தாடவே தொடங்கி விட்டான். "தாத்தா! இப்போதே இவையெல்லாம் சக்கரவர்த்தியிடம் கொண்டு போய்ச் சேர்க்கவேண்டும், தாத்தா! பொழுது விடியும் வரையில் சக்கரவர்த்தியிடம் இந்த மகிழ்ச் சிகரமான செய்தியை மறைத்து வைக்கக் கூடாது. அந்தப்புரத்துக்கு அருகில் போய்த் தாங்கள் சற்று விழித்துக் கொண்டிருங்கள். நான் ஓரே ஓட் டத்தில் சென்று மாமன்னரிடம் சேர்ப் பித்து விட்டு வருகிறேன்."

"போதும், இளங்கோ!"

பெரியவர் தமது விழிகளை இடுக்கிக் கொண்டு ஒவ்வொரு பொருளாக எடுத்து உற்று நோக்கினார். அவரது முகத்தில் நிலவிய ஏமாற்றத்தைக் கண்டு இளங்கோ திடுக்கிட்டான். வல்ல வரையர் உதட்டைப் பிதுக்கிக் கொண்டே, 'நாம் தேடி வந்தவை இவையல்ல!' என்பதைப் போல் தலை யசைத்தார்.

மணிமுடியில் பாண்டியருக்குரிய மகர மீன்கள் பொறிக்கப் படவில்லை. உடை வாளில் மகிந்தனுடைய சிங்க உருவம் காணப்பட்டது. பாண்டியருக்குரியது இரத்தின ஆரம்; பேழைக்குள் இருந் ததோ முத்தாரம்!

"மன்னர் மகிந்தனுடைய அரசுரிமைப் பொருள்கள் இவை" என்றார் வல்ல வரையர் வந்தியத்தேவர்.

அதைக் கேட்டதும் இளங்கோ திகைத் துப் போய்ப் பேச்சு மூச்சற்று அங்கேயே உட்கார்ந்து விட்டான். அந்தச் செய்தி அவ்வளவு தூரம் அவனைத் தாக்கி வாரிப் போடச் செய்தது. வெளியில் நிரம்பியிருந்த அமாவாசை இருள் அந்தத் தீவர்த்தி உமிழ்ந்த வெளிச்



MICO






LICENCE BOSCH

எல்லா என்ஜின்களுக்கும்
ஏற்றதாக
மைக்கோ
பிளக் கிடைக்கும்



மோட்டார் இன்டஸ்ட்ரீஸ் கம்பெனி லிமிடெட்
பெங்களூர்

# சிறு பிள்ளையைப்போல...

**சிறு பிள்ளைத்தனமல்ல!**

மேலும்
மேலும்
ஸாத்தேயின்
சாக்கலெட்டுகளை
தின்னுங்கள்...
அவைகள்
தித்திப்பானவை






ஸாத்தே பிஸ்கெட் அண்டு சாக்கலெட் கம்பெனி லிமிடெட், பூனா-2

*Heros' 67. TM*

ஸாத்ரே தயாரிப்பு

# plato 66







க்ளிப், ரிங், பாரல், பீடர், செக்ஷன், நிப் ஆகிய இடங்களில் ஒவ்வொரு பிளாடோ 66 பேனாவிலும் பெயர் போடப்பட்டிருக்கிறதா என்று பாருங்கள். நீங்கள் வாங்கும் பேனா உண்மையான பிளாட்டோ 66 தானா என்பதை நிச்சயப் படுத்திக் கொள்ளுங்கள்




விநியோகஸ்தர்கள்:
பெஸ்ட் பவுண்டன் பென் டிப்போ
தபால்பெட்டி நெ. 2121, பம்பாய்-2.

Shilpi MP. 772 TM

# நீரிழிவு

## நோயாளிகளுக்கு

## இலவச ஆலோசனை

•

சிறு நீருடன் சர்க்கரை வெளியானால் அதற்கு டயாபெடிஸ் மெல்லிடஸ் (Diabetes Mellitus) என்றும் சர்க்கரை இன்றி அடிக்கடி சிறு நீர் கழித்தால் அதற்கு டயாபெடிஸ் இன்ஸிபிடஸ் (Diabetes Insipidus) என்றும் பெயர். இந்த வியாதியால் அவதியுறும் நோயாளிகள் அதிக தாகம், பசி, தேகமெங்கும் வலி, சரீர உழைப்பு அல்லது மன சிந்தனை வேலை ஆகியவற்றைச் செய்ய விருப்பமின்மை, நாளுக்கு நாள் எடை குறைதல், சொறி, சர்ம வியாதிகள், மந்தமான கல்லீரல், பலமற்ற மூத்திரக் காய்கள், மற்றும் பழுதுள்ள பாங்கிரியாஸ் ஆகிய கஷ்டங்களுக்கு இலக்காவர். இந்த வியாதியைக் கவனிக்காவிட்டால் முடக்கு வாதம், சாலேஸ்வரம் தாங்க முடியாமை, ராஜப் பிளவை, தேகம் மற்றும் மன வலிமை குறைதல், தேக ஓய்ச்சல் அதிகக் களைப்பு மற்றும் பொதுவாக தேகத் திடமின்மை ஆகியவை ஏற்படக்கூடும். இஞ்செக்ஷன் ஏதுமின்றி, பட்டினி மற்றும் பத்தியமின்றி இந்த அபாயகரமான வியாதியை ஒழித்து, என்றென்றும் வாலிப வனப்புடனும் தேக திடத்துடனும் உழைப்பில் ஈடுபட, இலவச வைத்திய ஆலோசனைக்கு எமக்கு எழுதும்படி இந்த நோயினால் அவதியுறுபவர்கள் வேண்டப்படுகின்றனர். காலம் கடக்கு முன் உடனே தயவு செய்து எழுதவும்.

•

**வீனஸ் ரிசர்ச் லாபரடரி (K. M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**

# தெளிவு

## சுபஸ்ரீ

எங்கள் கட்டட வாசலில் வந்து நின்ற டாக்ஸியின் மஞ்சள் கூரை மாலைவெய்யிலில் தகதகத்தது. மேல் 'ப்ளாக்'கிலுள்ள பத்மா எங்கோ வெளியில் செல்லப் போகிறாள்போலும்! மடியில் தூங்கிக் கொண்டிருந்த சிசுவை உள்ளே தொட்டிலில் கிடத்தி விட்டு மீண்டும் 'பால்கனி'க்கு வந்தேன். பம்பாயிலுள்ள பல சங்கங்களின் கலை நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளும் சங்கீத விதூஷியான அவளுக்கு அடிக்கடி இவ்வாறு வாகனப் பிராப்தி ஏற்படுவது உண்டு.

எங்கோ சிதறிக் கிடந்த என் பார்வையை டாக்ஸியின் மீது திருப்பியபோது காரோட்டியின் நடவடிக்கை என் கவனத்தைக் கவர்ந்தது. அவன் ஏன் என் வீட்டையும் என்னையும் இவ்வாறு உற்றுப் பார்க்கிறான்? அவன் பார்வை என்னைச் சந்தித்து விட்டது. 'சீ. என்ன கூரிய நோக்கு!' மனம் 'திக்'கென்று அடித்துக்கொள்ள, முகத்தில் வெறுப்பும் பிரதிபலிக்க வேறு புறம் திரும்பிக் கொண்டேன். ஆனால் மீண்டும் அவன் என்ன செய்கிறான் என்று காணப் பீதி நிறைந்த ஆவல் தோன்றவே, மறுபடியும் காரின் திசையில் கண்களை ஓட விட்டேன். அடப் பாவி; என்னையே இது வரையில் நோக்கிக் கொண்டிருந்தான் போலும். ஆத்திரத்துடன் கசப்பும் கலந்து கொண்டது. இந்தப் பத்மாவுக்குத் தனியாக டாக்ஸியில் செல்லும்படி என்ன அவசரம்? ஆபீஸிலிருந்து கணவர் வரும் வரையில் பொறுக்க இயலாதா?

நான் கேள்விப்பட்ட எத்தனையோ டாக்ஸிக்காரர்கள் பற்றிய பயங்கரக் கதைகள் நினைவில் படர்ந்தன. இரண்டாவது ஆட்டம் சினிமா பார்த்து விட்டு ஏறிக்கொண்ட தம்பதியில்: புருஷனைச் சற்று இறங்கிக் காரைத் தள்ளுவதில் உதவி செய்யப் பணித்து விட்டு, மனைவியைத் தட்டிச் சென்ற நிகழ்ச்சி; பாங்கிக் கொள்ளைகளில் டாக்ஸிக்காரர்கள் பங்கு கொள்ளும் சம்பவம்...இவ்வாறு எத்தனையோ செய்திகள் நினைவில் நெருடின.

என் கணவர் காரியாலய அலுவலாக வெளியூர் சென்றிருப்பதையும், நான் தனியாக இருப்பதையும் இவன் உளவு பார்க்கிறானோ! இல்லை, வெறும் பிரமையா? பிரயாணிக்குப் பயங்கரமூட்டும் உறுப்பு, டாக்ஸியில் மீட்டர். ஆனால் டாக்ஸியில் ஏறுத எனக்கோ காரோட்டியின் தோற்றமே அச்சத்தை அளிக்கிறதே! எனது பீதி நிறைந்த எண்ணத்துக்குப் 'ப்ரேக்' போட்டுவிட்டது, பத்மாவின் அழைப்பொலி.

"கணபதி அய்யர் பெண்ணின் நடன அரங்கேற்றத்துக்கு ஒத்திகை நடக்கிறது. பதம் பாடுவதற்குச் செல்ல வேண்டும். அவர்கள் வீட்டு டிரைவர் 'மட்டம்' போட்டு விட்டானாம்! டாக்ஸி வைத்துக் கொண்டு வந்துவிடும்படி செய்தி அனுப்பினார்கள். எங்கள் வீட்டுக்காரர் வந்தால் இந்தச் சாவியைக் கொடுத்து விடுங்கள். ப்ளாஸ்கில் காப்பி தயாராக வைத்திருக்கிறேன்."

"பத்மா! ஒரு விஷயம்" என்று அவளை அழைத்து என்னுள் தோன்றிய பயத்தை விவரித்தேன். தனியாக இந்நகரத்தில் டாக்ஸியில் போகவேண்டாம் என்று எச்சரித்தேன்.

"பட்டப்பகலில் இப்படிப் பயந்து சாகிறீர்களே! அதெல்லாம் ஒன்றும் நடவாது" என்று கலகலவென்று சிரித்துப் பதில் கூறியபடி இறங்கினாள். மீட்டர்கொடி தாழ்ந்து விட்ட டாக்ஸி ரஸ்தாவின் ஓரமாக நின்று கைதூக்கி அழைக்கும் மனிதர்களை லட்சியம் செய்வதில்லை; உள்ளே வீற்றிருக்கும் பிரயாணி விரும்பும் இடந்தான் அதன் லட்சிய தூரம். அதுபோல் அவசரத்துடன் துணிவும் கொண்டிருக்கும் அவளது உள்ளத்துக்கு எடுத்துரைக்கும் எனது மொழிகள் உறைக்கவில்லை! எனினும் அவள் காரில் ஏறும்போது கடைசி முறையாக "ஜாக்கிரதை பத்மா, தனியாகச் செல்கிறாய்!" எனக் கூறினேன். அத்துடன் என் கடமையைச் செய்து விட்டதாக எனக்குத் திருப்தி ஏற்பட்டது.

• • •

இரவு எட்டு மணிக்கு மீண்டும் காரின் ஊதுகுழல் ஒலி கேட்டது. கதவைத் திறக்கப் பயந்துகொண்டு ஜன்னல் வழியாகக் கவனித்தேன். டாக்ஸியிலிருந்து இறங்கிய பத்மா பத்து ரூபாய் நோட்டை வழங்கினாள். சில்லறை மாற்றுவதற்காக டிரைவர், எதிர்சாரியிலுள்ள பால் கடைக்குள் நுழைந்தான்.

"ராஜம்! உனது எச்சரிக்கைக்கு நன்றி" என்று சொல்லிக் கொண்டே மணியை ஒலித்தாள். கதவைத் திறந்தவாறே "என்ன விசேஷம்? ஒன்றும் ஆபத்தில்லையே?" எனப் படபடத்தேன்.

"பயப்படாதே! தமிழில் நீ எச்சரித்ததை டிரைவர் புரிந்து கொண்டு விட்டான். அதனால் எங்களிடையே பேச்சு வளர்ந்து, அவனது முழுக்கதை தெரிய வந்தது. நீ நினைப்பது போல் அவன் போக்கிரியல்ல!"

குழந்தை குட்டிகளுடன் ரயிலில் வந்து இறங்கி வெகுநேரம் வாடகைக் கார் கிடைக்காமல் திண்டாடி, கடைசியில் 'மீட்டர்' கட்டணத்துக்கே ஒருவன் வந்தால் சம்சாரி எவ்வளவு ஆறுதலான மூச்சு விடுவானோ, அது போன்ற ஒரு திருப்தி எனக்கு ஏற்பட்டது.

பத்மாவும் விவரமாகக் கூற முற்பட்டாள்:

"டாக்ஸியில் நான் ஏறின உடனே அவன் கூறிய வார்த்தை இவைதான். 'அம்மா! தாய் போல் உங்களை நினைக்கிறேன். என் மீது நம்பிக்கை இருந்தால் எனது வண்டியில் பிரயாணம் செய்யுங்கள்'" என்று சுத்தமான தமிழில் கூறிய போது நான் திடுக்கிட்டு விட்டேன். "அந்த அம்மணி சொன்னது எனக்குப் புரிந்தது. நானும் தமிழன்தான். தமிழ்

பேச ஆரம்பித்தாலே நம்மவர்கள் வாடகை யில் பேரம் பேச ஆரம்பித்து விடுவார்கள். அதற்காகக் கூடிய வரையில் வட இந்திய வேஷமே போட்டு விடுவது'' என்றான் அவன் சின்னச் சிரிப்புடன்.

' மாதுங்காவுக்கு விடு '' என்றேன்.

'' ஏனம்மா! இந்த அம்மா ஆறு மாதங்கள் முன்னாடி சிவாஜி பார்க்கில் இருந்தாங்களா? அப்போ ஒரு 'டெலிவரி' கூட....''

''......''

'' முத்துலட்சுமி நர்ஸிங்ஹோமிலேதானே? டிசம்பர் மாதம் இருக்குமா ?''




காரின் சலனத்தோடு மீட்டரின் கட்டணம் உயர்வது போல், அவன் தரும் விவரம் கண்டு எனக்குப் பயம் பற்றிக் கொண்டது. 'இவன் என்ன டாக்ஸி டிரைவரா? துப்பறிப வனா, அல்லது திருடனா?' என்று எண்ணிய வாறு, ''இருக்கும். அப்போது இவர்களைத் தெரியாது. இங்கு கொலைட்டி வீடு கட்டி நாலு மாதங்கள்தானே ஆகப் போகிறது?'' என்று இழுத்தேன்.

'' அம்மா! இது அவர்கள்தானா என்று தெரிந்து கொள்ளத்தான் நான் அப்படிப் பார்த்தேன். அதைத் தவறாக நினைத்துக் கொண்டு விட்டீர்களோ, என்னவோ ?''

'' தெரிந்து உனக்கு என்ன ஆகணும் ?''

'' எனக்கு ஒரு விசித்திரக் கவலே. ஒரு தர்ம சங்கடமான நிலையில் இந்த அம்மாவை ஆஸ் பத்திரிக்கு எடுத்துப் போக நேர்ந்தது. அப் புறம் யாரோ சொன்னார்கள், என் வண்டியில் வந்த 'கேஸ்' அபூட்டாகி விட்டது என்று. கர்ப்பிணிகளுக்கு என் உதவி என்றைக்குமே 'ஆகி' வந்ததில்லே. கடவுள் மீண்டும் சோதித்து விட்டார்னு ரொம்ப வருத்தம்.''

'' அதென்ன கதை ?''

அகன்ற பாதையில் டாக்ஸி அதிவேகமாகச் செல்ல முற்பட்டது. காரோட்டியின் கதை யும் துரிதமாக வளர்ந்தது.

• • •

என் பெயர்தான் ஜயராமன். ஆனால் வாழ்க்கையில் எதிலுமே நான் வெற்றி கண்டதில்லே. பிறக் கும் போதே ஒரு ஜீவனை அழித் துக் கொண்டேதான் பிறந்தேன். என்னைப் பெற்ற போழ்திலே என் னுடைய தாயின் ஆயுள் முடிந்து

விட்டது. எனது மூத்த சகோதரியின் பராமரிப்பிலே ஆளானேன்.

சகோதரியின் பேறு காலத்துக்கு இன்னும் ஒரு மாதம் இருந்தது. வீட்டைக் கவனித்துக் கொள்ளச் சொல்லி விட்டு மைத்துனர் அவசர அலுவலாக வெளியூர் போயிருந்தார். ஏதோ குறிப்பிட்ட பலகாரத்தைப் பற்றி நாவில் ஜலம் ஊற நான் பேசியதைக் கேட்டு அன்பு மிக்க சகோதரி தனது பலவீனத்தையும் மறந்து தயாரிக்க முற்பட்டாள். இடையே கண்கள் இருண்டு, வலிப்பு வந்து, அடுப்பின் மீது சாய்ந்து விட்டாள். சூடு பரவி, விழிப்புத் தோன்றி, வீறிட்டு அலறி உதவிக்கு நான் ஓடும் முன்பே அக்கினி விளையாடி விட்டது. ஆபத்தான நிலையில் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றேன். தீயின் கோரத்துடன் அதிர்ச்சியில் கருச் சிதைவும் நேர்ந்து, அவளை உருக்கி விட்டது. இரண்டு நாட்கள் பிரக்ஞையின்றிக் கிடந்து கண்களை நிரந்தரமாக மூடிவிட்டாள்.

வேகமே கார் விபத்தின் வித்து; எனது ஆசையே அவள் சாவுக்குக் காரணமோ என்று அடிக்கடி மனச்சாட்சி அலறியது. அதற்குப் பிறகு கர்ப்பிணிகளைக் கண்டாலே என்னுள் நடுக்கம் ஏற்பட்டு வந்தது.

நாலைந்து குழந்தைகளுடன் திண்டாடிய மைத்துனர் எனக்கு ஏதாவது வேலை தேடித் தந்து தமக்கு உதவியாக்கிக் கொள்ள முயன்றார். ''பிரசவ ஆஸ்பத்திரி வாயிற்காவலுக்கு ஆள் வேண்டுமாம்; மேல் வரும்படி நிறைய வரும். போகிறாயா?'' என்று ஒரு நாள் கேட்டார். விதி என்னை விசித்திரமாக எங்கோ கொண்டு சேர்ப்பதை எண்ணிக் கலங்கினேன். ஒருநாள் ஒருவருக்கும் தெரியாமல் வீட்டை விட்டுக் கிளம்பி விட்டேன்.

ராணுவத்தில் சேர்ந்து டிரைவராக உயர்ந்தேன். பூனா யூனிட்டில் இருந்தபோது 'டிஸ்சார்ஜ்' செய்தார்கள். பம்பாய் மண்ணிலேயே பிழைப்புக்கு வழி தேடவேண்டும் என்று தோன்றியது. சிறு முதலாளி ஒருவரிடம் தினப்படி சந்தா செலுத்தி வாடகை மோட்டார் ஓட்டி வந்தேன். டாக்ஸி என்பது நடமாடும் ஒரு சிறு உலகம். அதில் நல்லவர்களும் ஏறுவார்கள்; தீயவர்களுக்கும் இடம் உண்டு. குடிகாரனும் வருவான்; குணவானுக்கும் அது உபயோகம். அநுயாசமாக ஏறி அமர்ந்து பல மைல்கள் சுற்றி 'இதோ வருகிறேன்' என்று ஓரிடத்தில் நழுவும் நபர்கள்; பிசகுபவர்கள்; பின்னேத்தாச்சிகள்; சில நிமிஷப் பிரயாணத்தில் காதல் புரியும் ஜோடிகள்; மீட்டரைக் கண்டு கலங்கும் சம்சாரிகள்—இவ்வாறு எத்தனையோ வித சவாரிகள். ஆனால் எல்லாருக்குமே டாக்ஸிக்காரன் நாணயத்தில் நம்பிக்கை இருப்பதில்லை.

பம்பாயிலுள்ள இலக்கியச் சங்கமொன்று சென்னையிலிருந்து நாடகக் குழுவைத் தருவித்துத் தமிழ் நாடகங்கள் நிகழ்த்தியது. பிரபல நடிகர் ஒருவரும், சங்கக் காரியதரிசியும் ஒரு நாள் ரயிலைப் பிடிக்க எனது டாக்ஸியில் பிரயாணம் செய்தார்கள். போகும்போது ரூபாய் ஐந்நூறு பெறுமான வெற்றிலைப் பாக்குப் பெட்டி ஒன்றை மறந்து வைத்துவிட்டுச் சென்றனர். மறுநாள் செயலாளரைத் தேடிப் பெட்டியைச் சேர்ப்பித்தேன். தபாலில் பெட்டியைப் பெற்ற கலைஞர் எனது நாணயத்தைப் பாராட்டி எழுதிய கடிதத்தை இன்னும் பொக்கிஷமாகக் காப்பாற்றி வருகிறேன். டாக்ஸிக்காரர்கள் என்றாலே நாணயக் குறைவானவர்கள் என்ற பொதுவான அபிப்பிராயம் இருக்கிறதே, அதற்காகச் சொல்ல வந்தேன். நீங்கள் ஏறுவதற்குத் தயங்குவதும் அந்தக் காரணம்தானே!

காரியதரிசி சுந்தரேசனுக்கு மிக்க சந்தோஷம். தங்கள் சங்கத்துக்கு விஜயம் செய்த போது பொருள் நஷ்டமாகிவிட்டது என்ற அபகீர்த்தி ஏற்படாமல் எனது நேர்மை காப்பாற்றியது என்ற மகிழ்ச்சி. பிரபல மோட்டார் ஏஜன்ஸி கம்பெனி ஒன்றில் வேலை பார்த்து வந்த அவர் என்பேரில் உள்ள நம்பிக்கை காரணமாக ஒரு சௌகரியம் செய்து கொடுத்தார். குறிப்பிட்ட தொகையைக் கட்டிவிட்டுப் பின்பு தவணையாக இரண்டு வருஷங்கள் சந்தா செலுத்தி, அதற்குப் பிறகு வாகனத்தை உரிமையாக்கிக் கொள்ளும் ஏற்பாடு அவரது ஸ்தாபனத்தில் இருந்து வந்தது. என் சேமிப்புக்கு ஏற்ப 'டெபாஸிட்' தொகையைக் குறைத்து, தவணைகளை அதிகமாக்கித் தமது பொறுப்பில் கார் ஒன்று வாங்கித் தந்த உதவி அவருடையது. சத்தியத்தோடு நாம் நடந்து கொண்டால் அதற்குப் பலன் இல்லாமற் போகாது.

இடையே ஒரு முறை தெற்கே சென்ற போது, ஆதரவற்றிருந்த அக்காள் மகளை மணந்து கொண்டேன். ஒரு வருடத்துக்கெல்லாம் மீண்டும் அக் கவலை தோன்றியது.

'கிரீச்' என்ற சத்தத்துடன் வண்டி நின்றது. பள்ளிச் சிறுவன் தப்பிப் பிழைத்தான். தெருவிலே எத்தனையோ ஒலிகள் ரீங்காரம் செய்து கொண்டிருக்கின்றன. ஆனால் மண்ணிலே ரப்பர் தேயும் 'பிரேக்' ஒலிக்கு மட்டும் எல்லோர் கவனத்தையும் ஈர்க்கும் பிரத்தியேக சக்தி இருப்பது கண்கூடு. டிரைவரின் கதையில் விசேஷ லயிப்பு ஏற்பட்டு விட்டது குறித்துப் பத்மாவுக்கே மிகவும் ஆச்சரியமாக இருந்தது.

காரின் 'கியர்' மாறி வேகமாக இயங்கியது; கதையும் துரித நடை போட்டது.



என் மனைவி கருத்தரித்ததும் என்னுள் கவலை உருவாகி விட்டது. பேறு காலம் நெருங்க நெருங்க, ஆக்ஸிலேட்டர் அழுத்தப்பட்ட காரின் வேகம் போல், எனது பய உணர்ச்சி அதிகரித்து வந்தது. ஓரிரவு வலியின் வாதனை அவளுக்கு அதிகமாகியது. துரதிர்ஷ்டம் பிடித்த நான் கர்ப்பிணியை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்வதின் மூலம் ஏதாவது நேர்ந்து விடுமோ என்ற உள்ளுணர்வு காரணமாகப் பக்கத்து வீட்டுத் தம்பதியுடன் அவளை அனுப்ப எண்ணினேன். அதற்காக நண்பனது டாக்ஸி ஒன்றை அழைத்து வரப் புறப்பட்டேன். "நீங்கள்தான் வண்டி ஓட்டி வர வேண்டும். நமது டாக்ஸியில்தான் செல்வேன்" என்று அந்தப்பேதை பிடிவாதம் செய்தாள். பின்னைத்தாச்சியிடம் எனது மனநிலையைக் கூறிச் சோர்வை ஏற்படுத்த விரும்பவில்லை. மழை தாரையாகப் பெய்து, நீரழிப்பான் விசை வேலை செய்யாமல், கண்ணாடி மங்கித் தெரிந்தால் கூடத் துணிந்து காரை எடுத்து விடுகிறோமல்லவா? கடைசியில் அவள் பிடிவாதத்துக்கு இசைய நேரிட்டது.

ஜயாள் ஆஸ்பத்திரிக்குச் செல்லும் வழியில் மாதுங்கா ரயில்வே 'கேட்'டை அடைந்து விட்டான். வெப்பு ஒலி கன்னங்களை உறுத்த, நிமிஷங்கள் நகருகையில், வலி அதிகரித்தது. காரைத் திருப்பித் தாதர் திலக் பாலம் வழியாகச் சுற்றி வளைத்துச் செலுத்தி, ஆஸ்பத்திரி அடைவதற்குள்.... தெய்வம் என்னைச் சோதித்து விட்டது. வீணான பயம் என்று எண்ணிக் கொண்டிருந்தது உண்மையாகி விட்டது. மனைவி பிழைத்தது புனர்ஜன்மம்தான். வயிற்றுப் பாரத்தை அங்கேயே புதைத்து விட்டு வந்து விட்டாள்.

இந்நிலையில்தான் ஒருநாள் உங்கள் மாடி வீட்டு அம்மணியை எனது வண்டியில் ஏற்றிச் செல்லும் சந்தர்ப்பம் நேரிட்டது. 'பேபி'கள் வரவால் பெரிய டாக்ஸித் தொழில் மந்தகதி அடையத் தொடங்கியிருந்த காலம் அது. 'பேபி'கள் எண்ணிக்கைக்கு உச்சவரம்பு கட்டி இனி லைசென்ஸ் வழங்கக்கூடாது என 'படா டாக்ஸி'க்காரர்கள் போலீஸ் கமிஷனர் ஆபீஸ் முன் 'ஆர்ப்பாட்டம்' செய்வதற்காகப் பரேலிலிருந்து ஊர்வலமாகப் புறப்பட இருந்தனர். அதில் கலந்து கொள்ளச் சென்றவன் இடையே 'ஸிட்டி லைட்' தியேட்டர் அருகே நிறுத்திச் 'சா' குடிக்க இறங்கினேன்.

அப்பொழுது அவசரம் அவசரமாக ஓடி வந்த இந்த அம்மாளின் கணவர் நர்ஸிங் ஹோமுக்குக் கர்ப்பிணியான துணைவியை அழைத்துச் செல்ல டாக்ஸியை எடுக்கச் சொன்னார். நான் மறுத்தேன். அந்தரங்கத்தில் அரித்துக் கொண்டிருந்த அச்சம் காரணமாக. ஆனால் 'ஸ்டிரைக்'கை எண்ணி நான் தயங்குவதாகக் கருதி அவர் கோபமுற்றார். "உன்னால் இரு உயிர்கள் சாகப் போகின்றன. உங்கள் 'யூனியன்' தலையில் இடிவிழ!" என்று அவர் வயிறு எரியச் சபித்தார்.

அவரது உணர்ச்சி என்னைத் தாக்காமல் இல்லை. என்னுடைய மனப் பிராந்தி காரணமாக ஏற்றிச் செல்லாமல் இருந்தால் 'கேஸ்' அபாய எல்லையை அடைந்து விடலாம். அழைத்துச் சென்றாலோ, அனுபவத்தால் நான் உணர்ந்திருந்த எனது துரதிர்ஷ்டம் அவர்களுக்கு ஏதாவது ஆபத்தை விளைத்து விட்டதென்றால், அதனை என்னால் தாங்க இயலாது. "என்னப்பா யோசனை, புறப்படேன்" என்று துரிதப்படுத்தினார். சில நிமிஷப் போராட்டத்துக்குப் பிறகு ஆபத்துக்கு உதவுவது என்றே முடிவு செய்தேன். 'ஸ்டிரைக்' நேரத்தில் சவாரி ஏற்றினால் சக தொழிலாளிகள் சும்மா விடுவார்களா? சொந்த 'டிரிப்' என்பதைக் குறிப்பிட மீட்டரைச் சுற்றித் துணியைக் கட்டிவிட்டுப் புறப்பட்டேன்.

அதிவேகமாகச் செல்லும் காரோட்டியை விட அருகில் அமர்ந்து கவனிப்பவருக்குத் தான் அச்சம் அதிகம். அவரது கணவரை விட எனது நெஞ்சில்தான் 'பெற்றுப் பிழைக்க வேண்டுமே' என்ற கவலை மிகுதியாக இருந்திருக்கக் கூடும். முத்துலட்சுமி நர்ஸிங் ஹோமி'ல் பிரயாணிகளை இறக்கி விட்ட போதிலும், மனச்சுமை இறங்கவில்லை.

இரண்டு நாட்களுக்குப் பிறகு ஆர்வ மிகுதியால் பிரசவ விடுதியில் விசாரித்தேன். குறிப்பிட்ட இரவில் வொர்லி பார்க்கிலிருந்து வந்த கேஸ் தீர்ந்து விட்டதாக ஆயா கூறினாள். அதிக நபர்களை ஏற்றிச் செல்லும் டாக்ஸி, செக்கிங்குக்குப் பயந்து, சுற்று வழியில் சென்று, பிரயாணத்தின் இறுதியில் போலீஸிடம் சிக்கினால் எவ்வாறு இருக்கும்? அவ்வாறு நான் மனக்கிலேசத்தையும் மீறித் துணிந்து செய்த உதவி இத்தகைய முடிவில் விளைந்த போது எனது உள்ளம் சாம்பி விட்டது.

நிலைமை அவ்வாறு இருக்கையில் திடீரென்று அந்த அம்மாளை ஒத்த சாயல் படைத்தவரை 'பால்கனி'யில் பார்த்தால் எனக்கு அதிர்ச்சி ஏற்படாதா? அவர்கள் என்ன நினைத்துக் கொண்டாலும் பரவாயில்லை என்று ஒரு முறைக்கு இரு தடவை கண்டு என் மனத்திலுள்ள சந்தேகத்தைத் தீர்த்துக் கொண்டேன்.

இதற்குள் டாக்ஸி கணபதி அய்யர் வீட்டை நெருங்கி விட்டது. 'இது அந்த அம்மாளாகத்தான் இருக்க வேண்டும். ஏனென்றால் 'ஸ்டிரைக்' சமயத்தில் ஒரு மகராஜன் துணிந்து வந்ததாலேயே நான் பெற்றுப் பிழைத்தேன்' என்று அவர்கள் சொல்லக் கேள்வி. 'ஆண் குழந்தையுடன் சுகமாக இருக்கிறார்கள்.'' பத்மா பேச்சை முடிப்பதும் டாக்ஸி நிற்பதும் சரியாக இருந்தது.

திரும்பி வந்த பத்மா ஒரே மூச்சில் இத்தனை விஷயங்களையும் கூறி விட்டாள்.

"என்ன ராஜம் இப்பொழுது என்ன சொல்கிறாய்? தோற்றத்தைக் கண்டு அவனைத் தவறாக எடை போட்டு விட்டாய் அல்லவா?"

இதற்குள் டிரைவர் சில்லறையுடன் திரும்பி வந்து விட்டான். விடுவிடென்று உள்ளே சென்று ஒரு தட்டில் சர்க்கரை எடுத்து வந்து அவன் முன் நகர்த்தினேன்.

"இந்தாப்பா! நீ செய்த உதவி மறக்க முடியாதது. அடையாளம் தெரியாமல் உன்னைப் பற்றி அவதூறாகப் பேசி விட்டேன். நான் கூறியது எதையும் மனத்தில் வைத்துக் கொள்ளாதே!" பீறிட்டு வரும் நன்றியுணர்ச்சியை அடக்க முடியாமல் கூறினேன்.

ஒவ்வொரு
வீட்டிலும்
தினந்தோறும்

கேச
கருமைக்காகவோ
கேச அலங்காரத்
திற்காகவோ






உபயோகிப்பவர்
ஒருவராவது
உண்டு








ஏகபோக ஏஜெண்டுகள்;
எம். எம். கம்பாட்வாலா
அகமதாபாத்—1

ஏஜெண்டுகள்:
வி. நரோத்தம் & கோ.,
பம்பாய்—2

MPS

சென்னை ஏஜண்டுகள் ஜே. பசவையா & கம்பெனி 260, எஸ்பிளனேட் மதராஸ்-1
இலங்கை ஏஜண்டுகள் சிக்கல் கதிர் & கோ., 41 & 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

புகழ்பெற்ற
காஞ்சீபுரம், ஆரணி,
கும்பகோணம்
பட்டு சேலைகளுக்கு




கோ-ஆப்டெக்ஸ்
பட்டு
மாளிகை

2, லஸ் சர்ச் ரோடு
மைலாப்பூர், சென்னை

---

மிக அழகிய...

அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதிதினமும் கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




கால்கேட்
பெர்பியூம்டு
காஸ்டர்
ஹேர் ஆயில்

எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!




## 117. நேயர்கள் கடிதம் (2)

கடிதம் 50/111 கோயம்புத்தூர் சகோதரி எழுதுகிறார். விஷயம் ஒரு பாரதம். விசேஷமாக விளக்கம் எழுதத் தக்கது. இவருக்கு வயது 32. கல்யாணமாகிப் பத்து வருஷங்கள் ஆகின்றன.

ஆறு வருஷங்களுக்கு முன்பு விலக்கு நாளில் ஒருவகை வயிற்றுவலி ஏற்படத் தொடங்கியது. எத்தனையோ மருந்துகள் சாப்பிட்டும் பலனில்லாமல் போகவே, பிரபல டாக்டர்களின் யோசனையை யொட்டி ஒரு ஆபரேஷன் செய்தார்கள். (பிறகு....?) பொதுவாக உடல் சிறிது தேறி வந்தது. ஆனால் வயிற்றுவலி அவ் விதமேதான் இருந்து வரலாயிற்று. (அப்படியானால் இந்த ஆபரேஷனால் என்ன பயன்?) 1958 ஜனவரியில் ஜுரம் வந்தது. ஆஸ்பத்திரியில் சிகிச்சைக்காகச் சென்று தங்கினார். வழக்கமான பரிசோதனைகளுக்குப் பிறகு "டைபாய்டு" என்று தீர்மானித்து அதற்கான சிகிச்சைகளைச் செய்தனர். ஜுரம் குணமாகி வீடு வந்தார். வீடு வந்த 5, 6 நாட்களுக்குப் பின் ஒரு நாள் குளித்தவுடன் உடம்பில் ஒரு படபடப்பு ஏற்பட்டு - பேசவும் முடியாத நிலையில் காது 'குப்' என்று அடைத்துத் தளித்த பிறகு 3, 4 மணிக்குப் பின் சிறிது தெளிந்தது. இதைத் தொடர்ந்து பசி இன்மை, அன்னத் துவேஷம் என்று ஏற்பட்டது. ஹோமியோபதி சிகிச்சை செய்ய விலக்கு காலத்தில் ஏற்படும் வயிற்றுவலி ஓரளவுக்குக் குறைந்தமாதிரி இருந்தது. படபடப்பு, பசியின்மை-அன்னத்துவேஷம் - அதைத் தொடர்ந்து ஆகாரமேற்காமை, உடல் மெலிவு இவை குணமாகாமலே இருந்தன. அடிக்கடி குளிர்வருவதுபோல் ஓர் உணர்ச்சி. மண்டைச் சூடு ஏற்படும். காது குப்பென்று அடைக்கும்.

மறுபடியும் பிரபல டாக்டர்களிடம் சிகிச்சை. அவர்கள் கர்ப்பாசயம், அது சம்பந்தமான உறுப்புக்கள் யாவுமே மிகவும் கெட்டிருப்பதாயும், அவற்றையெல்லாம் எடுத்துக் களையவேண்டுமென்றும் தெரிவித்தனர். இவ்வளவு கஷ்டப்படுகிறோமே, குழந்தைப் பேறு இல்லாவிட்டாலும் பரவாயில்லை, சுகவீனம் மாறினால் போதுமென்று கருதி மேற்படி ஆபரேஷனுக்கு இசைந்தார். ஆபரேஷனுக்கு கருப்பை அது சம்பந்தமான ஓவரி முதலிய உறுப்புக்கள் யாவும் களையப் பட்டன. இது ஜனவரி 59-ல் நடந்தது.

ஆபரேஷன் கழிந்த பிறகு ஜுரம். என்ன செய்தும் ஜுரம் குறைவதில்லை... மூன்று மாத காலம் கஷ்டப்பட்ட பிறகு இது 'கிட்னி'யில் உள்ள தகராறு என்று எக்ஸ்ரே மூலம் தெளிந்து ஒரு கிட்னியை ஆபரேஷன் செய்து எடுத்துக் களைந்து விட்டனர்.

பிறகு? ஜுரம் நின்றது. ஆனால் ...?

காது சத்தம் - பட படப்பு - குளிர் வருவது போன்ற உணர்ச்சி, இதைத் தொடர்ந்து ஒரு ஜில்லிப்பு - பேச முடியாத நிலை - பசியின்மை ஆகாரம் ஏற்காமை - உடல் மெலிந்து வருவது ஆகியவை அப்படியே இருக்கின்றன.

இருப்பது ஒரே கிட்னிதான். அதிலும் ஏதாவது தகராறு ஏற்பட்டால் ஆபத்து. ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமென்று டாக்டர் தாக்கீது செய்துள்ளார்.

இதற்கு என்ன செய்யவேணும்? ஜாக்கிரதையாக இருக்க வேணுமென்றால் என்ன பொருள்? இதுதான் சகோதரியின் கேள்வி.

கட்டுரை 65-ல் 13-7-58 கல்கி வெளியீட்டிலும் கட்டுரை 67-ல் 27-7-58 கல்கி வெளியீட்டிலும் தேவையான விவரங்களைக் காணலாம். சிறுபீளை - இதற்குப் பாஷாண பேதி என்று பெயரிட்டிருப்பதிலிருந்தே மூத்திர மார்க்கத்தில் ஏற்படும் கற்களை உடைத்து வெளிப்படுத்தும் என்று விளங்குகிறதில்லையா?

நெருஞ்சில் முள், நீர்முள்ளி, இளம் முள்ளங்கி, கரும்பஞ்சாறு, தண்ணீர் விட்டான் கிழங்கு எல்லாவற்றுக்கும் மேலாக இளநீர் என்னும் இவையுள்ளபோது மூத்திர மார்க்கத்தைச் சுத்தமாகவும் அடைப்பு ஏற்படாமலும் வைத்துக் கொள்வதில் என்ன கஷ்டமிருக்க முடியும்? பார்லி அரிசியை முழுசாகவே இட்டுக் காய்ச்சிய கஞ்சியில் தினம் ஒன்றிரண்டு டம்ளர் சிறு கற்கண்டு சேர்த்துச் சாப்பிட்டு வரலாமல்லவா?

இளநீரின் குணத்தைப் பற்றிச் சொல்லும்போது மூத்ரளம்—வஸ்திசோதனம் என்று சாஸ்திரம் தெரிவிக்கிறது. மூத்திரத்தைப் பெருக்கும்....மூத்ராசயத்தைக் குப்புறக் கழுவி அப்பழுக்கில்லாமல் சுத்தமாக்கிவிடும் என்று இதற்குப் பொருள். இதை இந்தச் சகோதரி அவ்வப்போது ஏற்று வருவது தேகாரோக்கியத்துக்கு மிகவும் நல்லது.

தண்ணீர் விட்டான் கிழங்கு மூத்ராசயம் சம்பந்தமான உபாதைகளையும், கர்ப்பாசயம் சம்பந்தமான உபாதைகளையும் ஒருங்கே நிவர்த்திக்கும்.

கோமூத்ர சிலாஜது என்னும் மருந்தோ மூத்ராசய சம்பந்தமான ரோகங்கள் யாவற்றிலும் பயன்தரக் கூடியது. கோமூத்ர சிலாஜது சேர்த்துத் தண்ணீர் விட்டான் கிழங்கின் லேஹியத்தை இந்தச் சகோதரி சாப்பிட்டு வருவது மிகவும் நல்லது.

திரணபஞ்சமூல கஷாயமும் அத்தகையதுதான். இப்படிப் பல வகை மருந்துகளுண்டு. ஆகாராதிகளில் உபயோகிக்கக் கூடிய பொருள்களுமுண்டு. இவற்றை உபயோகித்து வந்தால் போதும்.

பலாச்வகந்தாதி தைலத்தைத் தேய்த்து (உடம்புக்கு மட்டும்) தினசரி குளித்து வந்தால் அவ்வப்போது வரும் ஜ்வரம் நிற்கும். உடலில் பலம் பரவும். மெய் இறுகும். புஷ்டி உண்டாகும். இன்னும் என்ன வேணும்? எண்ணெய்க் குளியே பசியையும் உண்டாக்குமே!

•

சேலம் சகோதரர் கடிதம் 73/III ல் "அச்வகந்தா சூர்ணம் செய்ய வேண்டிய முறையும், அதற்குச் சேரவேண்டிய வஸ்துக்களும், எடை முறையும் விவரமாய் எழுதக் கோருகிறேன்" என்று எழுதுகிறார்.

அச்வகந்தாவை உரலிலிட்டு உலக்கையால் இடித்துச் சல்லடையிலிட்டுச் சலித்தெடுத்தால் அச்வகந்தா சூர்ணமாயிற்று. வாயகன்ற பாத்திரத்தின்மேல் ஒரு மெல்லிய துணியை இட்டுக்கட்டி, அத்துணியின் மூலம் சலித்தெடுத்தால் மிகவும் நுண்ணிய சூர்ணம் கிடைக்கும். இது எளிதில் உடம்பில் ஒட்டும்.

அச்வகந்தா என்னும் அமுக்கிராங் கிழங்கில் நாட்டு அமுக்கிராங் கிழங்கு, சீமை அமுக்கிராங் கிழங்கு என இரண்டு வகையுண்டு. வெளுத்த நிறத்தில் சிறு சிறு பென்ஸில்களைப் போல் உள்ளது சீமை அமுக்கிராங்கிழங்கு. இதைத் தண்ணீரில் கழுவி, பாலில் வேகவிட்டுப் பிறகு வெய்யிலில் உலர்த்திப் பொடித்துக் கொள்வது சிறந்தது.

இதைப்பற்றித்தான் ஒரு நண்பர் எழுதியிருந்தார். இந்தச் சூர்ணத்தைப் பாலில் கலக்கிக் குடிக்கும்போது "ஓவல்" போலவே இருப்பதாகத் தெரிவித்திருந்தார். இதையும் நேயர்கள் கடிதம் என்ற தலைப்பின்கீழ் ஒருமுறை முன்னமேயே தெரிவித்துள்ளேன்.



**பிறந்து 5 மாதங்கள் கூட ஆகவில்லை—**
**அவன் தவழ ஆரம்பித்து விட்டான்!**

அவனுக்கு அவன் தாயார்

**டுமெக்ஸ்** பேபி புட் புகட்டுகிறாள்

என்பதைச் சொல்லவும் வேண்டுமா!

டுமெக்ஸ் பிரைவேட் லிமிடெட், வேவல் ஹவுஸ், பம்பாய்-1

# ராலேயை விட நல்லதை நீங்கள் வாங்க முடியாது



# ராலே





உலகமெங்கும்
பிரசித்தி
பெற்ற
ஸைக்கிள்



SRC-53 TM

---

பல் சிதைவுகளையும்
வாய் நாற்றத்தையும்
ஈறு உபாதைகளையும்

# நிறுத்துங்கள்

பளிச்சென்று ஒளிவீசும் வெண்மையும்
ஆரோக்கியமுமான பல் வரிசைகளை
அடைய வேண்டுமானால்

# போர்ஹான்ஸ்

பற்பசையை உபயோகியுங்கள்





ஈறுகளின் உறுதிக்காக என்றே டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் கண்டுபிடித்து அளிக்கும் விசேஷத் துவர்ப்புப் பொருள் கலந்துள்ள பற்பசை இது ஒன்றுதான்.

Geoffrey Manners & Co. Private Ltd.

TAM.

5.25

# மகாத்மா காந்தி நூல்கள்

ரா. நா.

பலாத்காரமும் பகைமை உணர்ச்சியும் மலிந்திருக்கும் இந்தக்காலத்தில் மக்கள் மனத்தைப் பக்குவப்படுத்தி அன்பு வழியில் திருப்ப வேண்டியது நல்லோர் செய்ய வேண்டிய நற்பணியாகும். இந்தச் சேவைக்குக் காந்தியடிகளின் லட்சியங்கள், திட்டங்கள், கருத்துக்கள் மிகவும் பயனளிக்கும் என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை. காந்தியக் கருத்துக்களைப் பரப்பும் நோக்குடன் அடிகளின் நூல்களைத் தமிழில் பெயர்த்து வெளியிடக் காந்தி நூல் வெளியீட்டுக் கழகத்தினர் முன்வந்திருப்பது போற்றுதற்குரிய சேவையாகும்.

இவர்கள் வெளியிட்ட முதற்பகுதி 'தென் ஆப்பிரிக்கா சத்தியாக்கிரக வரலாறு,' 'ஹிந்த் ஸ்வராஜ்' இரு புத்தகங்களும் அடங்கியது. அதன் மூலம் சத்யாக்ரஹ உதயத்தின் விவரத்தையும், வாழ்க்கையில் மகாத்மா அனுஷ்டித்து வந்த கோட்பாடுகளையும் வாசகர்கள் அறிந்து கொள்ள முடிந்தது.

இரண்டாவது பகுதியில் அஹிம்சை பற்றி மகாத்மா எழுதியது, பேசியது யாவற்றையும் தொகுத்து வெளியிட்டிருக்கின்றனர். ''சத்தியமும் அஹிம்சையும் எனக்கு இருக்கும் இரு சுவாசப் பைகள் என அடிகள் கூறியுள்ளார். (பக்கம் 133) அஹிம்சை பற்றிய கட்டுரைகளையும், பிரசங்கங்களையும் பல தலைப்புகளின்கீழ்ப் பிரித்து வெளியிட்டிருக்கின்றனர். ஒவ்வொரு பகுதியிலும் கட்டுரைகளைக் காலக்கிரமப்படி தேதிவாரியாகப் பிரசுரித்திருப்பதனால் மகாத்மாவின் அஹிம்சைக் கொள்கை அவரது அனுபவத்துக்கேற்ப எப்படி விரிவடைந்து வந்திருக்கிறது என்பதை வாசகர்கள் எளிதில் உணர்ந்து கொள்ளலாம். இந்த நூலைப் படிப்பவர்கள் மகாத்மாவின் அஹிம்சை ஏட்டுச் சுரைக்காய் அல்ல, செயல் முறையில் அனுஷ்டித்துப் பயன்பெறக் கூடியது என்பதை உணர்வார்கள்.

'பகைவரிடத்தில் அன்பு' (பக்கம் 6) என்னும் தலைப்பில் வெளிவந்துள்ள முதல் கட்டுரையில் மகாத்மா அஹிம்சை பற்றிய தமது கருத்தை வெளியிடுகிறார்.

''யாரையும் வருத்தக் கூடாது; தம்மை நமக்கு எதிரி என்று எண்ணிக் கொள்பவர் மீதும்கூடக் கெட்ட எண்ணத்தை மனத்தில் வைத்துக் கொள்ளக் கூடாது என்பதே அஹிம்சை என்பதற்கு உண்மைப் பொருள். இந்த எண்ணத்தில் எவ்வளவு முன் ஜாக்கிரதையான தன்மை அடங்கியிருக்கிறது என்பதையும் கவனிக்க வேண்டும்.

''உங்கள் விரோதி என்று நீங்கள் எண்ணுபவர்களிடம்கூட'' என்று நான் சொல்லவில்லை. ''உங்கள் எதிரி என்று தம்மை எண்ணிக்கொள்பவரிடம்கூட'' என்று கூறியிருக்கிறேன். அஹிம்ஸா தருமத்தைப் பின்பற்றி நடப்பவருக்கு விரோதி ஒருவன் உண்டு என்பதையே அவர் மறுக்கிறார்.''

இந்தப் பொன் மொழிகளைக் கிரகித்துக் கொண்டு மக்கள் யாவரும் வாழ்க்கை நடத்தினால் உலகில் சச்சரவு ஏற்படுவதற்கே இடமில்லாமல் போய்விடும் என்பதில் சந்தேகத்துக்கே இடமில்லை.

* * *

அகமதாபாத்திலுள்ள ஓர் ஆலையில் வெறி பிடித்த நாய்களைக் கொல்வதே ஜீவ காருண்யம் என மகாத்மா தெரிவித்தார். இதற்குப் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது. இதை எவ்வளவு பெருமையுடனும், இன்முகத்துடனும் காந்திஜி சமாளித்திருக்கிறார் என்பதை ''அஹிம்சை, கொல்லாமை'' என்னும் பகுதியில் காணலாம். இந்தக் கட்டுரைகளின் மூலம் மகாத்மாவின் கொள்கை வாழ்க்கையை ஒட்டியது என்பதையும் உணர்ந்து கொள்ளலாம். 'சமயக் கோட்பாட்டில் அஹிம்சை' என்கிற பகுதியில் பகவத்கீதை பற்றிய மகாத்மாவின் ஆழ்ந்த கருத்துக்களை அறிந்து கொள்ளலாம்.

போர் சம்பந்தமாகக் காந்தியடிகள் வெளியிட்ட அபிப்பிராயங்களை எதிர்த்துக் கோபாவேசமாக அந்நியர்கள் தெரிவித்த ஆட்சேபங்களை மகாத்மா சமாளித்துப் பதில் எழுதிய கட்டுரைகளைப் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டுள்ள நண்பர்கள் ஊன்றிப் படிக்க வேண்டும். தாமும் கோபத்துக்குட்படாமல், எதிராளியின் மனமும் புண்படாமல் வாதம் செய்யும் உயர்ந்தமுறையை அடிகளின் கட்டுரைகள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

கடைசிப் பகுதியிலுள்ள கட்டுரைகளை ஆலை முதலாளிகளும் தொழிலாளிகளும் படித்தால் பகைமை உணர்ச்சிக்கு இடம் கொடாமல், பொருளாதாரச் சிக்கல்களைச் சுமுகமாக எப்படித் தீர்த்துக் கொள்ளலாம் என்பதை அறிந்து கொள்வார்கள்.

மக்களிடம் மகாத்மாவுக்கு இருந்த செல்வாக்குக்குக் காரணம் என்ன என்பதைப் பின் வரும் முறையில் அடிகள் தெளிவுபடுத்துகிறார்: ''ஆனால் நான் யார்? ஆண்டவன் அளிப்பதைத் தவிர எனக்கு வேறு பலம் கிடையாது. முற்றிலும் தார்மிகமானதைத் தவிர என் நாட்டு மக்கள் மீது எனக்கு எந்த விதமான அதிகாரமும் இல்லை. உலகை இன்று ஆட்டி வரும் பயங்கரமான பலாத்காரத்துக்குப் பதிலாக அஹிம்சை பரவுவதற்கு என்னை ஒரு கருவியாக இறைவன் கொண்டால், அதற்கான பலத்தை அவர் எனக்கு அளித்து வழியையும் காட்டுவார். என்னுடைய மிகப் பெரிய ஆயுதம் மௌனமாகப் பிரார்த்தனை செய்வதே. ஆகையால் சமாதானத்தின் வெற்றி கடவுளின் நற்கரங்களில் இருக்கிறது. நித்தியமான மாறுதலற்ற, தருமத்தின் வடிவான அவர் அருளின்றி எதுவுமே ஆகாது. அவரையோ, அவருடைய



**வில்லன்** :— (கதாநாயகனிடம்) அண்ணே! டைரக்டர் மெதுவா அடிக்கச் சொன்னா நீ உண்மையிலேயே பலமா அடிக்கிறியே.

**கதாநாயகன்** :— கதாநாயகியைக் காதலிக்கிற மாதிரி நடிக்கச் சொன்னா நீ உண்மையிலேயே காதலிச்சுட்டியே!

தருமத்தையோ நாம் தெளிவாக உணரவே முடியாது. அந்தத் தருமத்தின் காட்சி எனக்குச் சிறிதளவு புலப்படுவதே ஆனந்தத்தையும் நம்பிக்கையையும் வருங்காலத்தில் உறுதியையும் அளிப்பதற்குப் போதுமானது.'' (பக்கம் 453)

இவ்வளவு தெய்வீகத் தன்மை வாய்ந்த மகானின் அந்தரங்க சுத்தியான பொன் மொழிகளும் ஆத்ம பலம் பெற்ற அவருடைய பணியும் வாசகர்களுக்கு ஆதர்சமளித்து அஹிம்ஸைத் துறையில் பணியாற்றத் தூண்டும் என நம்புகிறேன்.

• • •

**ம**காத்மா காந்தி நூல்கள் மூன்றும் பகுதியில் அடிகளின் சுயசரிதை அடங்கியிருக்கிறது. 'சத்திய சோதனை' என்னும் தலைப்பில் 'கல்கி' மொழிபெயர்த்த இந்நூலைச் சென்ற தலைமுறையினர் நன்கு அறிவர். அதைப் பயன்படுத்திக் கொள்ளப் பிரஸ்தாப நூலின் பதிப்பாசிரியர் எவ்வளவோ முயன்றும் பயன் கிட்டவில்லை என்பது வருந்தத்தக்கது. ஆனால் மொழிபெயர்ப்புக் கலை விரைவாக அபிவிருத்தியடைந்து வருவதனால் இந்நூலைப் புதிதாக மொழிபெயர்த்ததும் நல்ல காரியம்தான்.

லட்சிய ஆர்வமுள்ளவர்கள் இந்நூலைப் படிப்பதன் மூலம் தங்களை மேம்படுத்திக் கொள்ளலாம். ஒரு கொள்கை லட்சியத்தை வகுத்துக் கொண்டு அதை அடைவதற்கான முயற்சி செய்தவரல்ல காந்தியடிகள். தமது வாழ்க்கையில் ஏற்பட்ட அனுபவங்கள் மூலம் உண்மை யறிந்து அதைக் கடைப்பிடித்து அதில் வெற்றியும் கண்டவர். ஆகையால் தமது வாழ்க்கையில் அவர் செய்த சோதனைகள் வாசகர்களுக்குப் பெரிதும் உதவிபுரியக் கூடிய படிப்பினைகளாகும்.

மேலும் இந்தச் சுயசரிதையின் பதிப்பாசிரியர் மகாத்மாவின் வாழ்க்கை வரலாற்றை அவர் விட்ட இடத்திலிருந்து அமரத்துவம் அடைந்த வரையில் விவரித்துப் பூர்த்தி செய்திருக்கிறார். இதைக் காந்திஜியின் 'வாழ்க்கைக் குறிப்புகள்' என்னும் பகுதியில் காணலாம். அடுத்தபடியாக, மகாத்மா காந்தியடிகள் நடத்திய போராட்டங்கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. மகாத்மா அனுபவித்த சிறைவாசங்கள் பற்றிய விவரங்கள் அடுத்த பகுதியில் இடம் பெற்றிருக்கின்றன. காந்திஜி குடும்ப மூதாதையர் பற்றிய தகவல்கள் மற்றொரு பகுதியில் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. 1888-ம் ஆண்டில் காந்திஜி லண்டனில் மாணவராயிருந்தபோது அவரது அனுபவங்கள் 'லண்டன் நாட்குறிப்பிலிருந்து' எனும் பகுதியில் வெளியிடப்பட்டிருக்கின்றன. கடைசியாக 'இந்தியாவில் காந்திஜியின் முதல் சிறைவாச அனுபவம்' என்னும் தலைப்பில் அடிகள் ஹக்கீம் அஜ்மல்கானுக்கு எழுதிய கடிதம் பிரசுரம் செய்யப்பட்டிருக்கிறது.

சுருக்கக் கூறின் இது மகாத்மாவின் சுயசரிதை மட்டுமல்ல, வாழ்க்கை வரலாறு என்று கூறலாம்.

இவ்விரண்டு பகுதிகளிலும் பதிப்பாசிரியர் திரு ரா. வேங்கடராஜுலு ஆதரவான அடிக்குறிப்புகள் தயார் செய்து சேர்த்திருப்பது நூல்களைச் செவ்வனே புரிந்து கொண்டு படிப்பதற்கு உதவி புரிகின்றன. இந் நூல்களில் குறிப்பிடப்படும் பெரியார்கள், அடிகளின் சக ஊழியர்கள், சம்பவங்கள் முதலியவைகளுக்குப் பூரண விளக்கம் தருகின்றன இக் குறிப்புகள். இறுதியில் சேர்க்கப்பட்டுள்ள பொருட்குறிப்பு அகர வரிசை நாம் விரும்பும் விஷயங்களைப் பற்றி விளக்கம் பெற உதவி புரியும். கண்ணுக்கும் உள்ளத்துக்கும் குளுமை யளிக்கும் பல புகைப்படங்கள் பிரசுரத்தின் சிறப்பை உயர்த்துகின்றன.

மிகுந்த சிரமப்பட்டு, சிரத்தையுடன், எளிய சரளமான தமிழ் நடையில் தயாரிக்கப்பட்டுள்ள இந் நூல்களைத் தமிழ் மக்கள் படித்துப் பயன் பெறுவார்கள் என நம்புகிறேன்.

காகிதமும், பிரசுரத் தொழில் உபகரணங்களும் அகாத விலைக்கு விற்பதனால் புத்தகத்தின் விலை 7-8-0 ரூபாய் வைத்திருப்பது அதிகமல்ல. ஆனால் காந்தியக் கருத்துக்களைப் பாமரரும் உணரும்படி செய்வதே வெளியீட்டாளர்கள் நோக்கமாகையால், அவர்களும் வாங்கிப் படிக்கக் கூடியபடி குறைந்த விலையில் இந் நூல்களை வெளியிட்டிருக்கலாம். இந்தக் குறையை இலவச நூல் நிலையங்கள் ஓரளவு போக்கலாம். ஒவ்வொரு நிலையமும் இந்த நூல்களில் ஏராளமான பிரதிகளை வாங்கி யாவரும் படிக்கும் வகை செய்யலாம். கண்ணுக்கும், கருத்துக்கும் விருந்தளிக்கும் முறையில் அமைந்த இந்நூல்களுக்குத் தமிழ் மக்கள் பேராதரவு அளிப்பார்களாக!

மகாத்மா காந்தி நூல்கள்: பகுதி 2-ம் மூன்றும்: ஒவ்வொரு பகுதியின் விலை ரூ. 7-50; பதிப்பாசிரியர், மொழிபெயர்த்தவர்: ஸ்ரீ ரா. வேங்கடராஜுலு; கிடைக்குமிடம்: காந்தி நூல் வெளியீட்டுக் கழகம், மதராஸ் 2.

# விஷ வெட்டுக் காயங்கள்



## ஜாம்-பெக் உதவியினுல் சீக்கிரம் குணமடைகின்றன

வெட்டுகள், சிராய்ப்பு, மற்றும் பூச்சிக் கடிகளிலிருந்து, குணமடையுங்கள்... கட்டிச்சிரங்கு, கொப்பளங்கள் மற்றும் விஷக் காயங்கள், பொடுகு சொரிகள் இவைகளை அகற்றுங்கள். எவ்வித சரும உபாதைகளையும் மூலிகைக்களிம்பான ஜாம்-பெக் குணப்படுத்துகிறது. மிருகக்கொழுப்பு மற்றும் எண்ணெய்கள் சேர்க்கப்படாதது என்பதற்கு உத்திரவாதம்.

அழகூட்டும் தன்மை வாய்ந்த எண்ணெய்ப் பசையற்ற ஜாம்-பெக் மெடிஸினல் க்ரீம் உபயோகியுங்கள்.

**Zam-Buk**



ஜாம்-பெக்
மூலிகைக்
களிம்பு
மற்றும்
மெடிஸினல் க்ரீம்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FZY-60-TAM

பி.இ. புல்போர்ட் (இந்) பிரைவேட் லிமிடெட், பம்பாய்

சோல் ஏஜண்டுகள் :

தாதா & கம்பெனி

86, நைனியப்ப நாயக் தெரு, சென்னை - 3









ரோமா
கூந்தல் வளர்க்கும் டானிக்







அதிநயமாக
உறுதியாக
வழவழப்பாக
எழுதக் கூடியது

டிஸ்ட்ரிபியூட்டர்கள்
ராஜேந்திரகுமார் & கோ.
236, அப்துல் ரஹ்மான்
தெரு. பம்பாய்-3

**RITESHARP** *Pens*
GHORUPDEV, BOMBAY 10

விற்பனை மற்றும் சர்வீஸ் செய்பவர்கள்:

ஜெம் அண்டு கம்பெனி

325/326, நேதாஜி போஸ் ரோடு, சென்னை-1




அத்தியாயம் 7

## "வெளியே போங்கள்!"

**வீ**ணாவின் மகிழ்ச்சியோடு மகிழ்ச்சி சேர்ந்தது. தான் அன்று தனது எண்ணத்தில் முன்னேற்றம் கண்டதே போல் தொழிலிலும் முன்னேற்றம் கண்டிருப் தாகவே மரகதத்தம்மாளின் அழைப்பைப் பற்றிக் கேள்விப் பட்டதும் அவள் உணர்ந்தாள்.

இரு வாழ்க்கை மேற்கொண்டிருப்பவர்கள் எல்லோரிடமும் அநேகமாக இக்குறையைக் காணலாம். அவர்கள் அவ்விரண்டில் ஏதாவது ஒரு வாழ்க்கையில் ஈடுபடும் போது மற்ற வாழ்க்கையை அறவே மறந்து விடுவார்கள். தொழில் அல்லது வேலைத் துறையில் கருத்துடன் ஈடு பட்டிருப்பவர்களுக்கு, அப்பொழுது வீடு-வாசல், பெண்டு-பிள்ளைகளின் நினைவே இல்லாமற் போய் விடுகிற தில்லையா? அதே மாதிரிதான் வீணாவும். வைத்தியத் தொழிலில் தனக்கு ஓர் அழைப்பு வந்ததும் புற வாழ்க்கையை உடனே மறந்து விட்டாள். வீட்டில் அடி எடுத்து வைக்கும் வரையில் அவள் மனத்தில் பொங்கிக் கொண்டிருந்த வெற்றிப் பெருமிதத்தை இந்த வெற்றிப்

மாயாவி

பெருமிதம் ஒரு கணத்தில் மூடி மறைத்து விட்டது. ஆம், அது மட்டும் மறைக்கப் படாதிருந்தால் இப்பொழுது காணப் போகும் மரகதத்தம்மாளின் மனம் புண்படும் காரியம் ஒன்றில் தான் ஈடுபடத் துணிந்திருந்தது அவனுக்கு நினைவு வந்திருக்கும். அது நினைவில் வந்திருந்தால் அந்த அம்மாளின் இந்த அழைப்பு அவனுக்கு இத்தனை உற்சாகம் அளித்திராது. அவளைக் காணப்போகும்போது வெளிப்படையாக இல்லா விட்டாலும், உள்ளூறவாவது சிறிது தயக்கம் கட்டாயம் ஏற்பட்டுத்தான் இருக்கும். ஆனால் அவன் தான் இந்த அழைப்பைப் பற்றிக் கேள்வியுற்ற கணத்திலேயே முழுவதும் டாக்டர் வீணுவாக மாறி விட்டானே! ஆதலால், எல்லையற்ற களிப்புடன், கடமையைக் கருத்தாக உடைய ஒரு டாக்டரைப் போன்று அவசரம் அவசரமாக இரண்டு வாய்ச் சோற்றை அள்ளிப் போட்டுக் கொண்டு சாப்பிட்டோம் என்று பெயர் பண்ணி விட்டு, வைத்திய சாதனங்கள் அடங்கிய தோல் பையைத் தூக்கிக் கொண்டு தெற்குத் தெருவுக்கு விரைந்தான்.

அவன் இத்தனை களிப்படைய வேறொரு காரணமும் இருந்தது. இதில் அவன் தன் திறமையை நன்ருகக் காட்டி நோயாளியைக் குணப்படுத்த முடியும். குணப்படுத்திக் கிராமத்தாரிடையே நற்பெயரைத் தேடிக் கொள்ள முடியும்.

வீணு கிராமத்தாரிடையே நற்பெயரைத் தேடிக் கொள்வதில் இவ்வளவு அக்கறையாக இருந்ததற்கும் காரணம் இருந்தது. முன்பானல் அவன் அது பற்றி அவ்வளவாகக் கவலைப்பட்டிருக்க மாட்டான். ஆனல் வருங்காலத்தில் அவர்கள் தன்மீது ஓரளவாவது நல்ல கருத்துடையவர்களாக இருப்பது இப்பொழுது அவனுக்கு மிக மிக அவசியம். ஏனென்றல் தான் மேற்கொள்ளத் துணிந்திருக்கும் வாழ்க்கை கிராமத்தினரிடையே பெரும் புயலைக் கிளப்பப் போகிறது. அச்சமயத்தில் தான் அவர்களுக்கு இன்றியமையாதவன் என்ற ஒரு நிலையை ஏற்படுத்திக் கொண்டிருந்தால், அதன் காரணமாக அந்தப் புயலின் வேகம் ஓரளவு குறையலாம் அல்லவா?

இத்தகைய நினைவுகளோடுதான் அன்றிரவு அவன் மரகதத்தம்மாளைக் காணச் சென்றன். வீணு சென்ற சமயம் மரகதத்தம்மாள் அண்டை வீட்டுத் திண்ணையில் சில பெண்களுடன் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தாள். அவனைக் கண்டதும், "வா. அம்மா!" என்று கூறிக் கொண்டு எழுந்து வந்தாள்.

வீணு ஏதோ கூற வாயெடுத்தான். ஆனல், மரகதத்தம்மாள் இடைமறித்து, "வீட்டுக்குப் போய்ப் பேசிக்கிடலாம், வா" என்று அவனைப் பின்னேடு அழைத்துச் சென்றுவிட்டாள்.

வீட்டு நடையில் தமது ஒற்றைக் கட்டிலில், கைகள் இரண்டையும் பிடரியில் கூட்டியவாறு, கருட்டி வைக்கப் பட்டிருந்த படுக்கை மீது சாய்ந்து, கண்களை மூடிக் கொண்டு அரைத் தூக்க நிலையில் இருந்தார் புஷ்பவனம் பிள்ளை. வீணுவும் தமது மனைவியும் வீட்டுக்குள்ளே வந்ததுகூட அவருடைய அந்த மோன நிலையைக் கலைக்கவில்லை. மேல் மாடியில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. சுந்தரம் அங்கே புத்தகம் படித்துக் கொண்டிருந்தான்.

உள்ளே நுழைந்த வீணு மென்குரலில், "மாமா!" என்று விளித்துப் புஷ்பவனத்துக்குத் தனது வருகையை அறிவிக்க முயன்றன். ஆனல் அப்பொழுதும் மரகதத்தம்மாள் அவனைப் பேசாமல் வருமாறு கைச்சாடை காட்டி விட்டு, விட்டு முற்றத்துக்கு அழைத்துச் சென்றள். பிறகு கூடத்தில் தொங்கிக் கொண்டிருந்த ஹரிக்கேன் விளக்கை எடுத்து வந்து முற்றத்துச் சாய்ப்பில் தொங்கிய கம்பி வளையத்தில் மாட்டி விட்டு, "உட்காரு வீணு! இதோ வந்துட்டேன்" என்று கூறிவிட்டு நடைக்குத் திரும்பிச் சென்றள்.

அங்கே அவள் புஷ்பவனம் பிள்ளையை உசுப்பி, ரகசியமான குரலில் அவரிடம் ஏதோ சொல்லிக் கொண்டிருந்ததை வீணு முற்றத்துச் சாய்ப்பில் இருந்தவாறே காண முடிந்தது. அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. 'அண்டை வீட்டில் யாரோ ஒரு பெண்ணுக்கு உடல் நலமில்லை என்றல்லவா சொன்னர்கள்! அத்தை ஏன் என்னை இங்கே அழைத்து வந்து உட்கார்த்தி யிருக்கிறர்கள்?' என்று வியந்தான்.

அதோடு மரகதத்தம்மாள் தன் கணவரிடம் பேசிவிட்டுத் திரும்பியபோது நடைக்கும் கூடத்துக்கும் இடையேயிருந்த வாயிற் கதவை மூடி உட்புறம் தாழிட்டுக் கொண்டு வந்தது அவன் வியப்பை அதிகமாக்கியது.

ஆதலால் அவள் சாய்ப்புக்குத் திரும்பி வந்ததும் வீணு ஆர்வத்துடன், "யாருக்கு அத்தை உடம்பு சரியாக இல்லையென்று வரச் சொன்னீர்கள்?" என்றுகேட்டான்.

"எனக்குத்தான்!" என்று கூறிவிட்டு மரகதத்தம்மாள் மெல்லிய புன்னகை ஒன்றை உதிர்த்தாள். ஆனல் அந்தப் புன்னகையில் களிப்பின் சின்னத்துக்குப் பதிலாகக் கசப்பின் சின்னமே மிகுந்திருந்ததை வீணுவால் உணர முடிந்தது.

"உங்களுக்கா? பக்கத்து வீட்டில் கர்ப்பிணிப் பெண் ஒருத்திக்கு அடிக்கடி

மயக்கம் போட்டுக் கொண்டிருப்பதாக அல்லவா சொன்னார்கள்!''

"ஆமாம்; ஆனால் அவனுக்கு எல்லாம் சரியாயிடிச்சு. இப்போ எனக்குத்தான்."

"அத்தை!" வீணா கண நேரம் அதிர்ந்து விட்டாள். அவள் கண்கள் மரகதத்தம்மாளின் உடலை ஊடுருவி நோக்கின. "இந்த வயதில் உங்களுக்கு..." அவளால் அதை வாய் திறந்து சொல்ல முடியவில்லை. ஏன்? நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

"ஆமாம்; இந்த வயசிலே, ஏதோ ஒன்னே ஒண்ணு இருந்தாலும் அது நல்லா இருக்குது என்கிற திருப்தியோடு இருந்தேன். இப்படி ஒரு கேலிக்கூத்து ஏற்படுமின்னு நினைச்சேனா? என்னவோ அம்மா, இப்போ நீ மனசு வைச்சியானாத் தான் இந்தக் கேலி ஏற்படாமல் தப்பலாம்."

"ஐயோ அத்தை!" என்று வீணா அலறினாள்.

"ஏம்மா?"

"நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள், அத்தை?"

"நான் சொல்வது இருக்கட்டும், வீணா! முதலிலே நீ இதுக்குப் பதில் சொல்லு. நான் உசிரை வைச்சுக்கிட்டு இருக்கணுமா, விட்டுடணுமா?"

"நீங்கள் எதற்காக உயிரை விட வேண்டும்? அப்படி என்ன நடந்து விட்டது இப்பொழுது? இந்த வயதில் இப்படி வந்து விட்டதே என்று நீங்கள் வருந்துவது நியாயந்தான். ஆனால் அது தவிர்க்க முடியாதபடி வந்து விட்டதே! இனிமேல்..."

மரகதத்தம்மாள் அவள் பேச்சில் குறுக்கிட்டாள். "என்னம்மா வந்துட்டுதேன்னு சுலபமாகச் சொல்லிட்டே? எங்கள் மானம் மரியாதை போகிறது இருக்கட்டும். அப்புறம் நாங்கள் இந்த ஊரிலே தலை காட்ட முடியுமா?"

"இதில் ஊர்க்காரர்கள் கேலி செய்ய என்ன இருக்கிறது, அத்தை? நீங்கள் வீண் மனப் பயம் கொள்ளுகிறீர்கள். இந்தக் காலத்தில் இதைவிடத் திடுக்கிடும் படியான காரியங்கள் மிகவும் சகஜமாக நடக்கின்றன. கிராமத்துக் காரர்கள் சில நாட்கள் ஏதேனும் வம்பு பேசிக் கொண்டுதான் இருப்பார்கள். பேசிவிட்டுப் போகட்டும் என்று விட்டு விடுங்கள். நான் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன், அத்தை! எனக்காகத் தயவு செய்து உங்கள் மனத்தை மாற்றிக் கொள்ளுங்கள். இதெல்லாம் இறைவன் செயல்! குழந்தை பிறப்பதும் இறப்பதும் நம்முடைய கையில் இல்லை!"



இப்பொழுது அதிர்ச்சி மரகதத்தம்மாளின் பக்கம் தாவியது. "வீணா!" என்று கத்தினாள் அவள். "குழந்தையாவது! குட்டியாவது! நீ என்ன உளறிக்கிட்டிருக்கிறே!"

நினைப்பும் நடப்பும் சில சமயம் எவ்வளவு விபரீதமாக வளர்ந்து விடுகின்றன, பாருங்கள். வீணாவுக்குப் புத்திமதி சொல்லித் தன் மகனின் தொடர்பை அறுத்துக்கொள்ளச் செய்யவே மரகதத் தம்மாள் அவளை இங்கே அழைத்தாள். இந்த விஷயம் வெளியே தெரியக் கூடாது; தன் கணவர்கூட அறியத் தேவையில்லை என்ற நினைவுடன், 'அன்று தற்செயலாக மயக்கம் போட்டு விழுந்த அண்டை வீட்டுக் கர்ப்பிணிப்பெண்ணைப் பார்க்க வேண்டும்; வரச் சொல்லுங்கள்' என்று கணவரிடம் சொல்லி அனுப்பினாள். வீணா அதை உண்மையென நம்பி இரவானாலும் பரவாயில்லையென ஓடோடி வந்தாள். அவளை ரகசியமாக அழைத்து வந்து பின்கட்டில் உட்கார்த்

# பூச்சிப் பத்திரிகை

---

## மூட்டைப் பூச்சிகளின் ஒரு காலனியே ப்ளிட் விஷத்தால் அழிந்தது!



### மூட்டைப் பூச்சி சமூகத்தில் பெரும் பீதி!

படுக்கையறையைச் சேர்ந்த கட்டிலிடைப் பேட்டையில் வசிக்கும் பிரபல மூட்டைப் பூச்சிகளில் ஆயிரக்கணக்கான பேர்களை நேற்று பட்டப்பகலில் ப்ளிட் ஆயுதபாணி இரக்கமின்றி கொலை செய்ததாக தெரியவருகிறது.

இந்த கோரசம்பவம் நேர்ந்தபொழுது மூட்டைப் பூச்சிகளில் பல பேர்களும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள் என்று தெரிய வருகிறது. ப்ளிட்டின் தீவிர சக்தியினால் பலருக்கும் எழுந்து ஓடக்கூட முடியாமல் போய்விட்டதாம். இந்த சம்பவம் மூட்டைப் பூச்சிகள் சமூகத்தில் பெரும் பீதியைக் கிளப்பி விட்டிருக்கிறது.







ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது)

கிறாள். பிறகு, ஒருகால் கணவரோ, மகனோ தாங்கள் பேசிக் கொண்டிருக்கும் போது அங்கே வந்து விடுவார்களோ என்ற சந்தேகம் தட்டவே, அரைத் தூக்கத்திலிருந்த கணவரை எழுப்பி, மேலே இருக்கும் மகனுக்குக் கேட்டு விடாத ரகசியமான குரலில், "வீணா பக்கத்து வீட்டுப் பெண்ணைப் பார்த்துட்டு வந்துட்டா. அதைப் பற்றி எங்கிட்டே ஏதோ இரகசியமாகச் சொல்லணுமாம். நாங்கள் நடைக் கதவை அடைச்சுக்கிட்டு உள்ளே இருக்கோம். கதவைத் தட்டித் தொல்லைப் படுத்தாதீங்க. உங்கள் மகனுக்கு அவள் இங்கே வந்திருக்கிற விஷயமே தெரிய வேண்டாம்" என்று முன்னேற்பாடு செய்து விட்டு வந்தாள். பின்னர் வீணாவும் தன் மகனும் பழகிக் கொண்டிருக்கும் விதம் தனக்கு எத்தனை பெரிய மன நோவை ஏற்படுத்தியிருக்கிறது என்பதைக் கூடமாகவும், நயமாகவும் வெளியிட்டாள்.

ஆனால் வீணாவுக்கு அவளுடைய செயலும், பேச்சும் வேறு விதமான அர்த்தத்தை அளித்தன. ஏனென்றால், "அந்தக் கர்ப்பிணிப் பெண்ணுக்கு எல்லாம் சரியாய்ப் போச்சு; இப்போ எனக்குத்தான்....." என்று மேலே சொல்லாமல் தயங்கியதும், அந்த அம்மாள் இத்தனை வயதுக்குப் பிறகு மீண்டும் கருவுற்றிருப்பதாக அவள் நினைத்து விட்டாள். அதைத் தன்னிடம் ரகசியமாகக் கூறி, அதனால் ஏற்படும் அவமானத்தைத் தவிர்க்கும்படி கேட்டுக் கொள்ளவே தனியே கூட்டி வந்திருக்கிறாள். அதற்காகத்தான் தூங்கிக் கொண்டிருந்த கணவரை எழுப்பி மேலே இருக்கும் சுந்தரம் வந்துவிடாதபடி பார்த்துக் கொள்ளுங்கள் என்று எச்சரித்து விட்டு, கதவையும் மூடித் தாழிட்டுக் கொண்டு வந்திருக்கிறாள் என்றும் அவள் நிச்சயித்து விட்டாள்.

இவ்வாறு இருவரும் வெவ்வேறு மனப் போக்குடன் உரையாடலை வெகுதூரம் வளர்த்துவந்த பிறகு இப்பொழுதுதான் கருத்து வேற்றுமை பளிச்சிட்டது. அதுவும் வீணா வாய் வார்த்தையாகக் குழந்தையைப் பற்றிக் குறிப்பிட்டதால்தான்! இல்லாவிட்டால் அவர்கள் உரையாடல் எப்படி எங்கே போய் நின்றிருக்குமோ?

இம்மாதிரி ஒரு வேடிக்கையான கருத்து மோதலும், விளக்கங்களும் முடிந்த பின்னர் நிஜ மோதல் ஆரம்பமாயிற்று.

வீணாவை அவமானமும், வியப்பும் வந்து மூடின. அவமானம், இல்லாத ஒன்றைக் கற்பனை செய்துகொண்டு அசட்டுத்தனமாக ஏதேதோ பேசிவிட்டோமே என்ற நினைவால் தோன்றியது. வியப்போ, அப்படியானால் அத்தை இவ்வளவு நேரமாக எதை மனத்தில் வைத்துக்கொண்டு தலை குனிவு, ஊர் ஏசல் என்றெல்லாம் பேசினார்கள் என்பது விளங்காததால் ஏற்பட்டது. ஆகையால் அவள் தன் அசட்டுத்தனத்துக்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டதும் அதைத்தான் வினவினாள்.

மரகதத்தம்மாளும் இப்பொழுது மூடி மறைத்துப் பேசவில்லை. வார்த்தைகளால் வீணாவை விளாசி எடுத்து விட்டாள். "உங்க அப்பாவை ஊரிலே எல்லாரும் தெய்வமாக் கும்பிட்டுக்கிட்டு இருக்கிறாங்க. உங்க குடும்பம் தலைமுறை தலைமுறையா சிறப்பான குடும்பம்னு பேர் வாங்கியிருக்குது. என்னவோ பாவம், உன் தலையெழுத்து இப்படி ஆயிடிச்சேன்னு ஊரிலே எல்லாரும் உன் மேலே அநுதாபம் காட்டிக்கிட்டு இருக்கிறாங்க. இல்லாட்டிப் போனா, தாலி அறுத்த பெண்களை வீட்டைவிட்டே வெளியே வரச் சம்மதிக்காத நம்மவங்க உன்னை டாக்டராத் தொழில் நடத்த விட்டிருப்பாங்களா? இதையெல்லாம் நினைச்சுப் பார்க்காமல் சிறுபிள்ளைத்தனமா நடந்துக்கிட்டிருக்கிறியே வீணா! இது நல்லா இருக்குதா உனக்கு? அதுதான் போகட்டும். இந்த அடாத்தனத்துக்கு எங்கள் ஒரே மகனைத்தானா பலி வாங்கணும்? ஏம்மா, நீ நல்ல பொண்ணு; நமக்கு வேண்டியவங்க வீட்டுப் பொண்ணு; படிச்ச பொண்ணு; பதவிசு தெரிஞ்ச பொண்ணுன்னு மனசிலே கள்ளங் கபடில்லாமல் உன்னை எங்கள் சொந்தப் பொண்ணா நினைச்சுக்கிட்டிருக்கிறோமே, அதுக்கு நீ கொடுக்கிற வெகுமானமா அம்மா இது?" என்று பலவாறு வெளுத்துக் கட்டினாள்.

அவள் வார்த்தைகள் ஒவ்வொன்றும் வீணாவின் மனத்தைச் 'சுரீர்-சுரீ'ரென்று குத்தின. ஆயினும் அவள் இந்தத் தாக்குதலை எதிர்பார்த்திருந்தவள்தானே! இதன் வேதனையை ஏற்றுச் சகிக்கத் துணிந்திருந்தவள்தானே! எனவே மரகதத்தம்மாள் தன்னைக் காய்ச்சி ஓய்ந்ததும், "முடித்து விட்டீர்களா?" என்று எரிச்சலோடு கேட்டாள்.

"என்னம்மா இப்படிக் கேட்கிறே?"

"பின் என்ன அத்தை? நானும் ஒரு பெண் என்கிற நினைவே இல்லாமல் நீங்கள் பாட்டுக்குப் பேசிக் கொண்டு போகிறீர்களே!"

"அடி ஆத்தே!" என்று மரகதத்தம்மாள் வியப்பை அடக்க முடியாமல் கையைத் தட்டிக் கன்னத்தில் வைத்துக் கொண்டாள். "அதுக்காக ஆகாமப்

போன பொண்ணு நீ என்ன வேணுமின்னாலும் செய்துக்கிட்டிருப்பியா ?''

'' நான் என்ன வேணுமின்னாலும் செய்துவிடவில்லே, அத்தை! எனக்கு எது அவசியமென்று தோன்றுகிறதோ அதைத்தான் செய்கிறேன்.''

மரகதத்தம்மாள் அதிர்ந்தாள். ''அப்படின்னு, நீ மானங் கெட்டதனமா நடந்துக்கிட்டுத்தான் இருப்பியா? ஏது? ரொம்ப பெரிய மனுஷியாப் போயிட்டே போலிருக்குதே! துணிச்சல் அதிகமாப் போயிடுச்சு போலிருக்குதே! உன் பெரிய மனுஷித்தனத்தை யெல்லாம் உன்னோடு வைச்சுக்கிடு, அம்மா! எங்களுக்கு இருக்கிறது ஒண்ணே ஒண்ணு. அதை இந்த வம்பிலே யெல்லாம் இழுத்துப் போடாதே. இது உன்னோட போற விசயமில்லே, வீணு; நல்லா நினைப்பிலே வைச்சுக்கிடு. உங்கள் வீட்டிலே ஒருத்தன் கட்டிக்கிட வேண்டிய பொண்ணு ஒண்ணு இருக்குது. நீ இப்படியெல்லாம் பண்ணிக்கிட்டு இருந்தியானால், அந்த வாழ வேண்டிய பெண்ணை ஒரு பயல் கூடத் திரும்பிப் பார்க்க மாட்டான். வாழ்வு சூனியாப் போன நீ அதைத் தேடிக்கிட்டியானால், வாழ்வு இனிமேத் தான்னு இருக்கிற மாலாவுக்கு அது இல்லாமப் போயிடும். உனக்கு மகனேக் கட்டி வைச்சு மகிமை கெட்டுப் போன தைலக்காள், உன் அடாத்தனத்தினலே மகளையும் கன்னியா நிறுத்திக்கிட்டிருக் கும்படியாக ஆயிடப் போகுது. அதையும் ஆலோசிச்சுப் பார்த்துக்கிடு.''

இந்தச் செய்தி வீணுவின் தலையில் பேரிடியாக விழுந்தது. ஆம்! அவள் இதை எதிர்பார்க்கவில்லே. தன் செயலால் தனது குடும்பத்தினருக்குத் தலை குனிவு ஏற்படும் என்று மட்டும் நினைத் தாளேயன்றி, அது மாலாவின் மண வாழ்வைப் பாதிக்கக்கூடும் என்பது அவளுக்குத் தோன்றவில்லே. மாலாவின் வாழ்வும் பாழானல் பாழாகட்டும் என்று அவள் பிடிவாதமாகச் செயல் படத் தொடங்கினல், அது வடிகட்டின சுயநலமே ஆகும்.

புரட்சி வாழ்வில் ஈடுபடத் துணியும் முன்பு அவள் தன் போன்ற வாழ்விழந்த பெண்களின் நல்வாழ்வுக்கு வழிகாட்டுவதற்காகவே அதில் ஈடுபடப் போவதாகத் தீர்மானித்துக் கொண்டாள். ஆனல் வாழ்விழந்த பெண்களுக்கு அவள் வாழ வழிகாட்டப் போவது ஒருபுறம் இருக்கட்டும்; இப்பொழுது தன் செயல் முறையாகப் பெற வேண்டிய ஒரு பெண்ணின் வாழ்வையே அல்லவா பறித்து விடுவதாக இருக்கிறது! அதிலும் அந்தப் பெண் தனது மனத்துக்கு இனியவள். தன் மீது அன்பைச் சொரிந்து, ''அக்கா, அக்கா!'' என்று உயிராக இருப்பவள். அவள் வாழ்வைப் பாழாக விடலாமா ?

சட்டென வீணுவின் துணிச்சலெல்லாம் பறந்து விட்டன. எது நடந்தாலும் பரவாயில்லே என்ற அலட்சிய பாவம் கரைந்தோடி விட்டது. இது வரையில் மரகதத்தம்மாளிடம் பேசிய பேச்செல்லாம் இப்பொழுது அவளுக்கு அவமானம் அளிப்பவையாகத் தோன்றின. அந்த அம்மாளின் முன் அமர்ந்திருக்கவே அவளுக்கு இப்பொழுது வெட்கமாக இருந்தது. அவள் திடீரென்று தனது மருந்துப் பையைத் தூக்கிக் கொண்டு எழுந்து நடக்க ஆரம்பித்தாள்.

'' என்னம்மா ஒண்ணும் சொல்லாமல் எழுந்திரிச்சுப் போறே ?''

நடந்து கொண்டிருந்த வீணு நிற்கவில்லே. அந்த அம்மாளைத் திரும்பிப் பார்க்கத் துணியவும் இல்லே. ஆனல் அழுது வழிந்த குரலில், '' கவலேப்படாதீர்கள், அத்தை! இனிமேல் உங்கள் மகன் என்னைச் சுற்றி வரமாட்டார் !'' என்று கூறிவிட்டு நடந்தாள்.

* *

மறுநாள் காலேயில் வழக்கத்துக்குச் சிறிது முன்னதாகவே சுந்தரம் வீணுவின் ஆஸ்பத்திரிக்கு வந்துவிட்டான். அப்பொழுதுதான் வீணு உள்ளே வந்து அமர்ந்திருந்தாள். இன்னும் நோயாளிகள்கூட யாரும் வரவில்லே. காரை வாசலில் நிறுத்திவிட்டு, ''வீணு!'' என்று ஆவலோடும் உரிமையோடும் விளித்துக் கொண்டு உள்ளே பாய்ந்து வந்தான்.

''நில்லுங்கள் அங்கே!'' என்று எழுந்து நின்று கூவினாள் வீணு.

சுந்தரம் திடுக்கிட்டான். ''என்ன வீணு? ஏன் ? என்ன நடந்தது ?''

'' ஒன்றும் நடக்கவில்லே. தயவுசெய்து இனி இங்கே வராதீர்கள் ! எங்குமே என்னைச் சந்திக்க முயலாதீர்கள் !''

'' ஏன் வீணு? ஐயோ ! ஏன் என்று சொல்வேன்.'' — சுந்தரத்தின் குரலில் அதிர்ச்சியும் ஏமாற்றமும் கலந்து ஒலித்தன.

அவனோடு பேச்சுக் கொடுத்தால் தன் மனம் தளர்ந்துவிடுமோ என்று பயந்தாள் வீணு. எனவே அவள் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டாள் ; முகத்தையும் குரலேயும் கடுமையாக்கிக் கொண்டாள். '' ஏன் என்று என்னைக் கேட்காதீர்கள். உங்கள் அம்மாவைப் போய்க் கேளுங்கள்! போங்கள் இங்கிருந்து !''

சுந்தரம் தலேயைக் கவிழ்த்துக்கொண்டு வெளியே நடந்தான். வீணு தொப்பென்று நாற்காலியில் அமர்ந்து, மேசை மீது தலேயைக் கவிழ்த்துக்கொண்டு விம்மி விம்மி அழுதாள் ! (தொடரும்)



# மீன் உணவை

## புசித்துப் பாருங்கள்

பவுண்டு வேக வைத்த மீன், பைண்ட் பால், 3 தேக் கரண்டியளவு ப்ரௌன் அண்டு போல்ஸன் பேட்டன்ட் கார்ன் ப்ளவர், ஒரு அவுன்ஸ் வெண்ணெய், ஒரு மேஜை கரண்டி நறுக்கிய பார்ஸ்லி, வேக வைத்து பிசைந்த உருளைக் கிழங்கு, எலுமிச்சம் பழச்சாறு.

மீனின் தோலையும், முள்ளையும் களைந்துவிட்டு, லேசான தணலில் வேக வைக்கவும். ஒரு பாத்திரத்தில் வெண்ணெயை உருக்கி, ப்ரௌன் அண்டு போல்ஸன் பேட்டன்ட் கார்ன்ப்ளவரை சேர்த்து நன்றாகக் கிளறவும். தணலிலிருந்து எடுத்துவிட்டு பாலைக் கலந்து நன்றாகக் கலக்கவும். திரும்பவும் அடுப்பில் வைத்து கொதிக்கும் வரை கிளறிவிட்டு, பிறகு 3 நிமிட நேரம் திரும்பவும் கொதிக்க வைக்கவும். மீன், பார்ஸ்லி, எலுமிச்சம் பழச்சாறு இவைகளைச் சேர்த்து கவனமாகப் பக்குவப்படுத்தவும். சூடு வெளியேறாத பாத்திரத்தில் இதை வைத்து, பிசைந்து வைத்த உருளைக் கிழங்கை மேலே பரப்பி, கொஞ்சம் மார்கிரெயினையும் தூவி மூடி விடவும். பின்பு சாதாரண தணலில் 20 நிமிட நேரம் பக்குவமாக தயார் செய்துகொள்ளவும்.

**ப்ரௌன் அண்டு போல்ஸன் கார்ன்ப்ளவர் பேட்டன்ட் ஆக அங்கீகரிக்கப்பட்டது.**

இதன் பரிசுத்தத் தன்மைக்கு இப்பரிசோதனையைச் செய்து பாருங்கள் :-

இரண்டு மேஜைக் கரண்டியளவு ப்ரௌன் அண்டு போல்ஸன் பேட்டன்ட் கார்ன்ப்ளவரை கொதித்து ஆற வைத்து குளிர்ந்த ஜலத்தில் நன்றாகக் கலக்குங்கள். 24 மணி நேரம் இவ்விதம் வைத்த பிற்பாடுங்கூட கெட்ட வாசனை உண்டாகாமல், மாசற்றதாகவும், பெக்டீரியா முதலிய அசுத்த அணுக்களால் சேதப்படாமலும் இருப்பதைக் காண்பீர்கள். மற்ற ப்ரௌன் அண்டு போல்ஸனின் உயர்தர சாதனங்கள் என்னவென்றால்: ரெய்ஸ்லி, கஸ்டர்ட் பௌடர், ப்ளேவர்ட் கார்ன் ப்ளவர்.



இங்கிலிஷ், ஹிந்தி, அல்லது தமிழ் பாஷைகளில் பிரசுரிக்கப்பட்ட அழகான சமையல் புஸ்தகம் இலவசமாக வேண்டுவோர் இங்குள்ள கூப்பனை பூர்த்தி செய்து அனுப்பவும். (வேண்டாத பாஷையை அடித்து விடவும்)

தபால் செலவிற்காக 15 நயா பைசா விலையுள்ள தபால் ஸ்டாம்பு நான் இதோடு அனுப்புகிறேன்.

ஸ்ரீ/ஸ்ரீமதி/செல்வி.............................................

.............................................

விலாசம்.............................................

டிப்பார்ட்மெண்ட் :. KLK 18

கார்ன் ப்ராடெக்ட்ஸ் கோ.
(இந்தியா) ப்ரைவேட் லிமிடெட்
தபால்பெட்டி : 994, பம்பாய் 1



கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட்.

இந்தியாவில் ஏஜெண்டுகள் : பாரி அண்டு கோ., லிட்.



# கச்சி ஏகம்பன்

திருநாவலூரிலே பிறந்து, திருவெண்ணெய் நல்லூரிலே இறைவனால் ஆட்கொள்ளப்பட்டு, திருவாரூரிலே பரவையை மணந்து சம்பிரமமாக வாழ்ந்தவர் சுந்தரர். இவரது வாழ்க்கை மிகவும் ரஸமாக அமைந்ததொன்று. இவர் வீட்டுச் சாப்பாட்டுக்குக் குண்டையூரில் சில நெல் பெற்றால் அதைத் திருவாரூர் கொண்டு சேர்க்க இறைவனையே கேட்பார். முதுகுன்றத்தில் பணம் கிடைத்தால் அதை அங்குள்ள மணிமுத்தாற்றில் போட்டுவிட்டுத் திருவாரூர் கமலாலயத்தில் எடுத்துக் கொடுக்க வேண்டுவார். அவிநாசி சென்றால் எத்தனையோ வருஷங்களுக்கு முன்பு அங்கு ஒரு பிள்ளையை முதலை உண்ட செய்தி அறிந்து, 'கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே' என்று இறைவனுக்கே கட்டளை இடுவார். அத்தனை உரிமை அவருக்கு இறைவனிடத்தில். அத்தனையையும் செய்வார் இறைவன் அட்டியில்லாமல் இந்தத் தம்பிரான் தோழருக்கு. இதற்கெல்லாம் பரிசாக இறைவன் இவரிடம் பெறுவது ஒவ்வொரு தடவையும் பத்துப் பத்துப் பாட்டே. இந்த சுந்தரர் திருவொற்றியூர் வருகிறார். அங்குள்ள கன்னிப்பெண் சங்கிலியைக் கண்டு காதலிக்கிறார். அவளை மணம் முடித்து வைக்க அங்குள்ள மாணிக்கத் தியாகரை வேண்டுகிறார். அவரும் இணங்குகிறார். சங்கிலிக்குப் பரவை ஞாபகம் வருகிறது. இவர் ஒரு வழி சொல்லிப் 'பெரு வழி' போகிறவராயிற்றே. ஆதலால் தன்னை 'எக்காலமும் பிரியேன்' என்று இறைவன் சன்னிதியிலே சத்தியம் செய்து தரச் சொல்லுகிறாள். கொஞ்சமும் தயங்காமல் சுந்தரர் சத்தியம் செய்கிறார்; மணம் முடிகிறது. கொஞ்ச நாட்கள் கழித்ததும் திருவாரூர் தியாகர் ஞாபகமும் அத்துடன் பரவையின் ஞாபகமுமே சேர்ந்து வருகின்றன. சத்தியத்தையெல்லாம் காற்றில் பறக்க விட்டுவிட்டுப் புறப்பட்டு விடுகிறார், திருவொற்றியூரை விட்டு. சத்திய பங்கம் நேர்ந்ததன் காரணமாக இரு கண்களையுமே இழக்கிறார். என்றாலும் திருவாரூர் செல்வதை விடவில்லை இந்த வன் தொண்டர். வெண்பாக்கம் சென்று இறைவனிடமே கேட்டு ஊன்றுகோல் ஒன்று பெறுகிறார். கச்சிக்கு வந்து ஏகம்பனை வணங்கி இடக்கண்ணில் ஒளி பெறுகிறார். இவ்வாறு ஒரு கண் ஒளி பெற்ற பின் உளம் கசிந்து பாடுகிறார்.

ஆலந்தான் உகந்து அமுது செய்தானை,
  ஆதியை அமரர் தொழுதேத்தும்
சீலந்தான் பெரிதும் உடையானை
  சிந்திப்பார் அவர் சிந்தையுளானை
ஏலவார் குழல் உமை நங்கை
  என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பன் எம்மானைக்
  காணக் கண் அடியேன் பெற்றவாறே.

ஆகவே, நல்ல ஞானக் கண் பெற விரும்புபவர்கள் கண் பெற்ற பயனைப் பெறவேண்டியவர்கள் எல்லாம் சென்று காணவேண்டிய தலம் கச்சியும் அங்கு கோயில்கொண்டிருக்கும் ஏகம்பனுமே.

தொ.மு.பாஸ்கரத் தொண்டைமான்

மக்களுக்கு முக்தி தரும் நகரங்கள் ஏழு என்பர் பெரியவர்கள். காஞ்சி, அயோத்தி, மதுரை, மாயை, காசி, அவந்திகை, துவாரகை என்றும் கணக்கிடுவர். இவை ஏழில் காஞ்சியை ஒதுக்கி விட்டால் மூன்று சிவஸ்தலங்கள். மற்றைய மூன்றும் விஷ்ணு

ஸ்தலங்கள். காஞ்சி நகரம் ஒன்றுதான் சைவ வைணவ சமரசம் கொண்டதால் இருவருக்கும் பொதுவானதாக இருக்கிறது. அதனால்தான் முக்தி தரும் நகரங்களுள் முதல் ஸ்தானம் வகிக்கிறது காஞ்சி என்னும் கச்சி. **கச்சிப்பேடு** என்று பழைய கல்வெட்டுகளில் வழங்கப்படுவதே **காஞ்சி. காஞ்சிபுரம்** என்றும் இன்று வழங்கப்படுகிறது. 'கேட்ட வரம் அளிக்கும் கீர்த்தியுள்ள தெய்வங்காள் கூட்டோடே எங்கே குடி போனீர்?' என்று கேட்கிறார் ஒரு கவிஞர். அவருக்குப் பதில் சொல்லலாம் நாம். அத்தனை தெய்வங்களும் சேர்ந்து ஒன்றாகக் குடி வந்திருக்கும் தலமே காஞ்சி. அங்குள்ள மக்களைக் கூட ஜனசங்கியைக் கணக்கு எடுத்து விடலாம். ஆனால் அங்குள்ள கோயில்களையும் மூர்த்திகளையும் கணக்கெடுப்பதென்பது என்னவோ சிரமசாத்தியமான காரியந்தான். நமக்குத் தெரியும், அண்ணன் தம்பியர் சொத்துக்களைப் பாகப் பிரிவினை செய்து கொள்வார்களென்று. அத்தான் மைத்துனர்களுக்குள் ஏது பாகப் பிரிவினை? அந்தப் பாகப் பிரிவினையே நடந்திருக்கிறது இங்கே. காஞ்சி ஐந்து மைலுக்கு மேலே நீண்டிருக்கும் பெரிய ஊர். இதை இரண்டு கூறாக்கி, சிவனும் விஷ்ணுவுமே பங்கு போட்டுக் கொண்டிருக்கிறார்கள். மேல் பகுதி **சிவ காஞ்சி.** கீழ்ப்பகுதி **விஷ்ணு காஞ்சி.** பங்கு வைத்ததில்கூட நேர்மை இல்லை. சிவன் பெரியதொரு பங்கைத் தனக்கு எடுத்துக் கொள்கிறார். அவர், அவர் துணைவி காமாக்ஷி, அவர் மகன் குமரன் இவர்கள் இருக்கும் பகுதியே **பெரிய காஞ்சி.** அத்திவரதரும் அவரைச் சேர்ந்தவர்களும் **சிறிய காஞ்சியிலே** இருக்கிறார்கள். சத்திய விரதர், மணிகண்டீசர் ஐராவதீசுவரர், கச்சபேசுவரர், தான் தோன்றி ஈசுவரர், புண்யகோடீசர், பாணுதீசர் என்ற பெயர்களில் முப்பதுக்கு மேற்பட்ட கோயில்களில் இருக்கிறார் இறைவன். அதே போல் பச்சை வண்ணர், பவள வண்ணர், சொன்ன வண்ணம் செய்தவர், ஆதிகேசவர், அழகியசிங்கர், உலகளந்தவர், ஜகதீசர் பாண்டவப் பெருமான் என்ற பெயர்களில் விஷ்ணுவும் கிட்டத்தட்ட இருபதுக்கு மேற்பட்ட கோயில்களில் கொலுவிருக்கிறார். பெரிய காஞ்சிப் பகுதியில் விஷ்ணுவுக்கும், சிறிய காஞ்சிப் பகுதியில் சிவனுக்கும் சில சில இடங்களை விட்டுக் கொடுத்து நிரம்பவும் சௌஜன்யமாகவே வாழ்கிறார்கள் அத்தானும் மைத்துனரும். எத்தனை பேர் எத்தனை பெயர்களில் எத்தனை கோயில்களில் இருந்தாலும் தலைமைப் பதவி இருவருக்குந்தான். விஷ்ணு காஞ்சியின் தலைவர் **அத்திகிரி வரதர்.** சிவகாஞ்சியின் தலைவர் **ஏகம்பன்.** இன்று கச்சி ஏகம்பனைப் பார்ப்பதோடு திருப்தி அடையலாம். தலைவரைக் கண்டு வணங்கி விட்டால் மற்றவர்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் அல்லவா?

காஞ்சியில் இருக்கும் தெய்வங்களுக்குள் முதன்மையானவர் கச்சி ஏகம்பனே என்றாலும், கலை வளத்தாலும் சரித்திரப் பிரசித்தியாலும் ஏகம்பனுக்கு முன் நிற்பவர் கைலாசநாதரே. இந்தக் **கைலாசநாதரது கோயில்** பல்லவ மன்னன் **ராஜ சிம்மனால்** கட்டப்பட்டது. அதனால் கல்வெட்டுக்களில் ராஜசிம்மேசுரம் என்று காணப்படும். ஊருக்கு மேற்கே ஓர் ஒதுக்குப்புறமான **பல்லவ மேடு** என்னும் இடத்திலே, அற்புதமான சிற்ப வடிவங்கள் பலவற்றை உள்ளடக்கிக்கொண்டு நிற்கிறது கோயில். கைலைக்கு நிகரான தலம் ஆனதினால் கைலாசநாதர் அங்கே குடி வந்திருக்கிறார், பதினாறு பட்டை போட்ட லிங்கத் திரு உருவில். இவரைத் தற்சமயம் வணங்கிவிட்டு, விரைவாகவே செல்லலாம் ஏகாம்பரர் கோயிலுக்கு. சென்னையிலிருந்து பங்களூர் செல்பவர்கள் கண்ணில், சென்னையிலிருந்து முப்பத்தி எட்டாவது மைல்கல் பக்கம் 'Temple view' என்று எழுதப்பட்டுத் தெருவில் நிறுத்தப்பட்டிருக்கும் ஒரு பலகை தென்படும். அதுவரையில் குனிந்தே சென்றிருந்தாலும், அங்கு நிமிர்ந்து பார்த்தால் ஒரு பெரிய கோபுரம் வானுற வளர்ந்து நிற்பதைக் காணலாம். அந்தக் கோபுரத்தைக் குறிக்கோளாக வைத்துக்கொண்டு காஞ்சிக்கு வரலாம். கச்சி ஏகம்பன் கோயில் ராஜகோபுர வாயிலின் வழியாக நுழையலாம். இக்கோபுர வாயில் தென் திசையில் இருந்தாலும் கோயிலில் உள்ள மூர்த்தி கிழக்கு நோக்கியவராகத்தான் இருக்கிறார். உலகீன்ற அம்மை உமை, உலகம் உய்யக் கைலையிலிருந்து இறங்கி வந்து கம்பை நதிக் கரையிலே மணலால் லிங்கம் ஒன்றை அமைத்துக்கொண்டு பூஜை செய்கிறாள்.



கச்சி ஏகம்பன் கோயில்

அந்தச்சமயத்தில் கம்பை நதி பெருக்கெடுத்து வர, அம்மை நடுக்கமுற்றாலும் நம்பிக்கையை இழக்காமல் லிங்கத் திரு உருவையே கட்டிப் பிடித்துக் கொள்கிறாள். அம்மையின் வளை அணிந்த கைகளால் இறுகத் தழுவியதால், அவனது வளைத் தழும்பும் முலைத் தழும்பும் பெற்ற பெருமானாக, தழுவக் குழைந்த தலைவராக அம்மைக்கு அருள் பாலித்தார் என்பது வரலாறு. இத்தலத்தில் பிருதிவி உருவில் இருக்கும் மூலத் திருவுருவை விடப் பிரசித்தி பெற்றவர் ஏகாம்பரநாதர். இவர் கர்ப்பக் கிருஹத்துக்குப் பின்னுள்ள மாமரத்தடியில் தம் துணைவி ஏலவார் குழலியுடன் கொலுவிருக்கிறார். நான்கு



மாமரத்தடியில் ஏகாம்பரர்

வேதங்களும் சேர்ந்தே இந்த மாமரமாக உருவாகி யிருக்கிறது என்பது புராண வரலாறு. மாமரத்தின் நான்கு கிளைகளில் பழுத்து உதிரும் கனிகளுக்கு நான்கு விதமான சுவை என்பர் உண்டு மகிழ்ந்தவர்கள். இந்தக் கனிகளை உண்பவர்களுக்குப் புத்திரப் பேறு கிட்டிக்கும் என்பது நம்பிக்கை.

கம்பமாக லிங்கத் திரு உருவில் இருப்பவன் கம்பன் என்று அழைக்கப்படுவதில் வியப்பில்லை. இல்லை, கம்பை நதிக்கரையில் நிற்பவன் ஏகம்பன் என்று சொல்வதிலும் தவறில்லை. இது போக, ஏகம்பனுக்கும், ஏகாம்பரனுக்குமே விளக்கம் தருவார்கள் அறிஞர்கள். கம்பம் என்றால் நடுக்கம். நடுக்குற்ற உமையாள் தழுவப் பெற்றதால் ஏகம்பன் ஆனான் என்றும், ஆம்ரம் என்றால் மாமரம், மாமரத்தடியில் வீற்றிருப்பவர் ஏகாம்பரர் ஆனார் என்றும் விளக்கங்கள் வளரும். இவை யெல்லாம் ஆராய்ச்சியாளர்களுக்கே விட்டு விடலாம். இந்தக் கோயிலில் இந்த ஏகம்பனுக்கும் போட்டியாக எழுந்துள்ளவர் மூவர். அவர்கள் மூவரும் முறையே **வெள்ளக் கம்பன், கள்ளக் கம்பன், நல்ல கம்பன்** என்ற பெயரில் லிங்கத் திருஉருவில் அமைந்திருக்கிறார்கள். இவர்களை முப்பது ஏக்கர் பரப்பிலே உள்ள இந்தக் கோயிலில் தேடிச் சென்று வணங்கி விடைபெறுவது சிரமமே.

ஆதலால் 'மாவடி வைகும் செவ்வேள்' மலரடி வணங்கிவிட்டு, தனித்ததொரு கோயிலிலே இருக்கும் **ஏலவார் குழலியையும்** வணங்கலாம். (ஒரு விசேஷம்: காஞ்சியில் இறைவன் எண்ணற்ற திருப் பெயர்களில் எண்ணற்ற கோயில்களில் இருந்தாலும், அங்கெல்லாம் அம்மனுக்குத் தனித்த சன்னதி கிடையாது. காமக்கோட்டத்தில் கொலுவிருக்கும் காமாட்சியின் சந்நிதியே பொதுவான சந்நிதியாகும்.) இன்னும் மேலே வடக்குப் பிராகாரத்தில் நடந்தால் நம்மை வெளியே போக விடமாட்டார், **நிலாத் திங்கள் துண்டப் பெருமான்.**

நீருரும் செஞ்சடையாய் நெற்றிக்கண்ணாய்,
நிலாத் திங்கள் துண்டத்தாய்,
நின்னைத் தேடி
ஓருரும் ஒழியாமே ஒற்றித் தெங்கும்
உலகமெலாம் திரிதந்து,
நின்னைக் காண்பான்
தேருரும் நெடுவீதி பற்றி நின்றேன்

என்று **அப்பர்** பாடலைப் படித்த நான் இத்தனை நாளும் நிலாத் திங்கள் துண்டத்தான் சிவபெருமானே என்று நினைத்திருந்தேன். ஆனால் இந்தப் பெருமான் நல்ல பட்டை நாமம் சாத்திக்கொண்டு அழகான சிலை வடிவில் பெருமானாக நிற்கிறார். மக்களில் ஒரு சிலர் ஏதோ சைவம், வைணவம் என்ற பேதம் உடையவர்களாக வாழ்கிறபோது நிலாத் திங்கள் துண்டத்தான் ஆன சிவனே நிலாத் திங்கள் துண்டத்தான் ஆன விஷ்ணுவாக இந்த ஏகம்பன் கோயில் உள்ளே நிற்பது வியப்பிலும் வியப்புத்தானே.

ஏகம்பன் கோயில் கொண்டும் இந்தக் காஞ்சி மிக்க சரித்திரப் பிரசித்தி பெற்றதொரு நகரம். கிறிஸ்து பிறப்பதற்கு முன்னமேயே சோழ நாட்டை ஆண்ட **கரிகால் பெருவளத்தான்**, என்னும் திருமாவளவன், சாத்தன் அருளால் காஞ்சியில் செண்டு பெற்றான் என்றும் அந்தச் செண்டு கொண்டே இமயத்தை அடித்தான் என்றும் சிலப்பதிகாரம் கூறும். **பெரும்பாணாற்றுப்** படையில் உருத்திரங் கண்ணனாராலும், க்ஷேத்திர வெண்பாவில் **ஐயடிகள் காடவர்கோனாலும்** பின்னர் மூவர் முதலியவர்களாலும் பாடப்பெற்ற பெருமையுடையது காஞ்சி. மகேந்திர வர்மர், நரசிம்ம வர்மன், பரமேசுவர வர்மன், ராஜசிம்மன் முதலிய பல்லவ மன்னர்கள் இருந்து ஆண்ட, கலை வளர்த்த தலமாகவும் இருந்திருக்கிறது. இவற்றை யெல்லாம் விட, சீன யாத்திரிகன் **யுவான் சாங்**, இந்த நகரத்துக்கு கி. பி. 640ல் வந்து பௌத்த சமய உண்மைகளைப் பரப்பினான் என்றும் இந்நகரத்தின் பெருமைகளை விரிவாக எழுதி வைத்தான் என்றும் அறிகிறோம். அதோடு இங்கு ஓர் அரிய சர்வகலாசாலையே அந்தக் காலத்தில் இருந்தது என்றும், இங்கிருந்தே வட நாட்டு **நாலந்தா** பல்கலைக் கழகத்துக்குத் **தர்மபாலர்** என்ற பேராசிரியர் சென்றார் என்றும் சரித்திரம் கூறுகிறது. இதெல்லாம் தெரிந்துதானோ என்னவோ, 'கல்வி கரையிலாக் கச்சி' என்றார் அப்பர். இந்தப் 'பாட்டினில் அடங்காக் காஞ்சி'யின் பெருமையைக் காஞ்சி புராணத்திலே விரிவாகக் காணலாம். இந்தப் பரந்த வையகமே கழனி, அந்த வையத்தின் தேயங்களே நன்செய்கள், அந்தச் செய்யிலே வளரும் கரும்பே தொண்டை வளநாடு. அக்கரும்பின் சாறால் ஆகிய கட்டியே கச்சி. அச் சர்க்கரைக் கட்டியில் உள்ள இனிய சுவையே கச்சி ஏகம்பன் கோயில் என்று கூறும் ஒரு பழம் பாட்டு. இனி அச் சர்க்கரைக் கட்டியைச் சுவைப்பது உங்கள் பேறு.

# புகழ் பெற்ற போலீஸ் விழா

"கதிர்"

சென்னை மாநில காவற்றுறையினர் இவ்வாரம் நூற்றாண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள்.

'காவற்றுறை' என்றால் ஏதோ காவேரிப் படித்துறையோ என்று தயங்க வேண்டாம்! "போலீஸ் இலாகா" என்பதன் பொருள்தான் "காவற்றுறை."

"எல்லோருக்கும் புரியக்கூடிய ஒரு பெயரை மாற்றிப் பற்களின் வலிமையைச் சொற்களால் சோதிப்பானேன்?" என்று வியந்தேன். ஒருவேளை எனக்குத்தான் இப்படித் தோன்றுகிறதோ என்று நினைத்தேன். ஆனால் சென்னை போலீஸ் துறை மந்திரி கனம் பக்தவத்சலம் அவர்களும் தமது வியப்பை வெளியிட்டிருப்பது தெரிந்து சற்று ஆறுதல் ஏற்பட்டது. "'போலீஸ்' என்ற சொல், ஆங்கிலமானாலும் அது எல்லோராலும் புரிந்து கொள்ளக் கூடியதாயிருக்கிறது. அதை அப்படியே நாம் ஏற்றுக் கொள்வதால் தமிழின் சிறப்பு குறைந்து விடாது. அவசரப்பட்டுக் காவல் நிலையம், காவற்றுறை என்றெல்லாம் மாற்றம் செய்திருக்க வேண்டாம்!" என்று அவரும் தமது கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

சென்னை ராஜ்யத்தில், போலீஸ் இலாகா சரியான முறையில் உருவாகி இந்த மாதத்துடன் நூறு ஆண்டுகள் பூர்த்தி ஆகின்றன. மகமதியர்கள் தாங்கள் ஆட்சி செய்த காலத்தில் நகர்க் காவலுக்குச் சிற்சில ஏற்பாடுகளைச் செய்திருந்தார்கள். சௌக்கிதார், கொத்தவால்கள் என்று சிலரை இதற்கு நியமித்திருந்தனர். ஆங்கிலேயர்கள் இவர்களையே சில காலம்வரை உபயோகித்து வந்து, பிறகு காவல் பொறுப்பை ஜமீன்தார்களிடம் விட்டு வைத்தார்கள். ஜமீன்தார்களால் இந்தப் பொறுப்புக்களைச் சரிவர நிறைவேற்ற முடியவில்லை. அவர்கள் நியமித்த அதிகாரிகள், திருடர்களைப் பிடித்து அவர்களிடமுள்ள திருட்டுச்சொத்துக்களைப் பறிமுதல் செய்து, தங்களுக்கே வைத்துக்கொள்ளத் தலைப்பட்டனர். இப்படிப் பல விதங்களிலும் சீர்கேடான முறையில் சிதறிக் கிடந்த காவல் ஏற்பாடுகளை ஒழுங்கு செய்து ஒரு நிரந்தரமான இலாகாவை அதற்கென்று ஆங்கில ஆட்சியினர் சிருஷ்டித்தனர். அது தான் போலீஸ் இலாகா.

அந்நிய ஆட்சியாளர்கள் இக்காரியத்தை ஒரே நாளில் சாதித்து விடவில்லை. தாசில்தாருக்கும் ரெவின்யூ இன்ஸ்பெக்டருக்கும் முதலில் போலீஸ் அதிகாரம் வழங்கினார்கள். போலீஸ் ஸ்டேஷன்கள் எப்படி இருக்க வேண்டுமென்று தெரியாமல் திண்டாடினார்கள். போலீஸ் ஸ்டேஷன்களைத் தாசில்தார் கச்சேரியின் கொல்லைப்புறமும் கணக்குப்பிள்ளை வீட்டுத் திண்ணைப்புறமும் அமைத்தனர். இந்தப் போலீஸ் ஸ்டேஷன்களில் இரண்டு சேவகர்களுக்கு மேல் அதிகமாக இருப்பதில்லை.

அஸ்தமித்ததும் கள்வர்கள் பயத்தால் போலீஸ் ஸ்டேஷனில் தனிமையாக இருக்கப் பயந்து கொண்டு இந்த இருவரும் ஊருக்குள் வந்து விடுவார்கள்!

இவ்வாறு கட்டுத் திட்டங்கள் இல்லாமல் இயங்கி வந்த போலீஸ் பொறுப்புகளைத்தான் ஆங்கிலேயர்கள் ஒழுங்கு செய்து மாற்றி அமைத்தார்கள். அதற்காக, சென்னைசட்டத்தில் முக்கியமான பிரிவு ஒன்றையும் 1859-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் சேர்த்து, அதை ராஜ்ய நிர்வாக சபையில் அரங்கேற்றி வைத்தார்கள்.

அந்தச் சட்டம் அரங்கேற்றமானதிலிருந்து சென்னை போலீஸ் இலாகாவிலும் புதிய சகாப்தம் உதயமாயிற்று. அதன் பிறகு மளமளவென்று போலீஸ் துறை வளர்ச்சி பெறத் தொடங்கிவிட்டது. இதுநாள் வரை போலீஸ் சேவைக்கு நேரடியாக ஆட்களைத் தேர்வு செய்து வந்தது போக, பயிற்சிப் பள்ளிகள் தோன்றி, அதன் மூலம் தேர்வு செய்யும் வழக்கம் ஆரம்பமாயிற்று. போலீஸ் இலாகாவில் பல பிரிவுகள் இணைந்தன. அரசியல் பிரிவு ஏற்பட்டது. ரிசர்வ் பிரிவு தோன்றியது. குதிரைப் போலீஸ் பிரிவு, உளவு பார்ப்போர் பிரிவு



அந்த நாள் போலீஸ் சேவகர், இன்ஸ்பெக்டர்

என்றெல்லாம் இவைகள் வளர்ந்து இன்று நமது போலீஸ் இலாகாவின் அதிசய சாதனைக்கு அடையாளமாக விளங்கும் துப்பறியும் நாய்கள் பிரிவு வரை தழைத்திருக்கிறது.

இந்த அதிசய நாய்களின் சாதனைகளைப் போற்றுதவர்களே நாட்டில் இல்லை என்று கூறலாம். மொத்தம் சென்னை துப்பறியும் பிரிவில் பயிற்சி பெற்ற நாய்கள் ஏழு இருக்கின்றன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் அபூர்வ சக்தி வாய்ந்ததாக விளங்குகிறது. ஆறு மாதக் குட்டியாயிருக்கும் போதே நாய்களுக்கு இங்கு பயிற்சி அளிக்கிறார்கள். இனசரி இந்த நாய்களுக்கு வகுப்புகள் நடக்கின்றன.

நாய்களின் உபாத்தியாயர்தான் அவற்றின் போஷகராகவும் விளங்குகிறார். நாய்களைக் குளிப்பாட்டுவது, உணவு அளிப்பது முதலிய எல்லாக் காரியங்களையும் அதன் உபாத்தியாயரே கவனித்துக் கொள்கிறார்.



பழங்காலத்து போலீஸ் சூப்பரண்டெண்டு

சென்னை மேற்குத் தொகுதி டி. ஐ. ஜி. ஸ்ரீ ஓ. எல். பார்ரல் நகர சபை ஸ்டேடியத்தில் இந்த விழாவைத் துவக்கி வைத்தார். ஸ்ரீ பார்ரல் அவர்கள், சென்னைப் போலீஸ் துறையில் எஞ்சியுள்ள ஆங்கில அதிகாரியாவார். அவர் இந்த விழாவைத் துவக்கி வைத்ததும், அவ்வாறு செய்யும்படி அவரைக் கேட்டுக் கொண்டதும் மிகவும் பொருத்தமாகும். சுதந்திர இந்திய மக்களின் நல்லெண்ணத்தை இது எடுத்துக் காட்டுவதாகவும் இருந்தது.

சென்னை போலீஸ் கமிஷனர் ஸ்ரீ ஆர். எம். மகாதேவன் அவர்களைத் தலைவராகவும், ஸ்ரீ கே. ஆர். ஷெனாய் அவர்களைக் காரியதரிசியாகவும் கொண்டு, இவ் விழாவுக்கு விரிவான கமிட்டி ஒன்று அமைத்திருந்தனர். விழாவின் பல்வேறு நிகழ்ச்சிகளையும் கமிட்டி அங்கத்தினர்கள் தங்களுக்குள் பகிர்ந்து கொண்டு, ஒவ்வொரு அம்சமும் சிறக்கச் செய்தார்கள். நிகழ்ச்சிகளில், கதம்ப வித்தைகள், அலங்கார ஊர்வலம், போலீஸ் சரித்திர வெளியீடு, சேவையில் உயிர்த் தியாகம் புரிந்த வீரர்களுக்கு நினைவுச் சின்னம் அமைத்தது ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

நகரசபை ஸ்டேடியத்தில் ஆரம்பமான கதம்ப வித்தைகளில் (டாட்டூ) ஏழடி உயரப் போலீஸ் சேவகர்கள் புரியும் வேடிக்கைகள், கோமாளிகளின் குறும்புத்தனம், சிலம்ப அணி, மறையும் பாம்பு, நிலைக்கும் படையினர் நிகழ்த்திய நிகழ்ச்சி இவற்றைக் குறிப்பிட வேண்டும்.

தேகப்பயிற்சி வித்தையில் அகில இந்திய சாம்பியன் பட்டம் பெற்ற ஒரு போலீஸ் வீரரின் சாகஸங்களையும் கதம்ப வித்தையில் காண முடிந்தது.

இந்தியப் பாதுகாப்பு மந்திரி ஸ்ரீ வி.கே.கிருஷ்ண மேனன் இந்தக் கதம்ப வித்தைக்கு விஜயம் செய்து, இதைப் பாராட்டிச் சென்றார். இந்தக் கதம்ப வித்தை மூன்று தினங்கள் நடந்தன. ஒவ்வொரு தினமும் சொல்லி முடியாத அளவுக்கு ஸ்டேடியத்தில் கூட்டம் கூடியிருந்தது. ஸ்டேடியத்துக்குள் போலீஸ் வித்தைகள் நடந்து கொண்டிருந்த போது, வெளியே உயரமான மரங்களில் கூட்டத்தினர், ஏறி நின்றும் தொங்கிக் கொண்டும் விளையாட்டங்களைக் கவனித்ததும் ஒரு வித்தையாக விளங்கிற்று.

ஜீப்புகளும், இதர மோட்டார் வாகனங்களும் ஏராளமாக வந்து, போலீஸ் துறையில் இருந்த குதிரைகளின் ஸ்தானத்தைப் பறித்துக்கொண்டு விட்டன போலும்! போலீஸ் குதிரைகள் முன்னெல்லாம் கம்பீரமாக இருக்கும். எண்ணிக்கையிலும் அதிகமாக இருந்துவரும். ஆனால் முதல் நாள் கதம்ப வித்தையில் பங்கெடுத்துக் கொண்ட சில குதிரைகள் ஓடுவதைப் பார்த்தபோது, அவை தடுக்கி விழுந்து, குழியும் பறித்து விடுமோ என்று தோன்றியது. நல்லவேளை அப்படி நேரவில்லை!

கதம்ப நிகழ்ச்சிகளைத் தூக்கி அடித்து விட்டது அலங்கார பவனி. ஊர்வலத்தில் கலந்து கொண்ட வண்டிகள் ஒவ்வொன்றிலும், போலீஸ் துறை வளர்ச்சியை விளக்கும் 'மாடல்'கள் வைக்கப்பட்டிருந்தன. அழகான சிற்ப வேலைகளுடன், இசை முழக்கம் செய்து கொண்டு கும்மி கோலாட்டத்துடன் அவை சென்னை தெருக்களில் பவனி வந்து கடற்கரையிலுள்ள ஐ. ஜி. காரியாலயத்தை அடைந்தன.

ஊர்வலத்தில் வந்த வண்டிகளில் ஒன்று போலீஸாரின் நவீன விஞ்ஞான ஆர்வத்தை வெளியிட்டது. 2059-ம் ஆண்டு சென்னைப் போலீஸார் சந்திர மண்டலத்துக்கு ராக்கெட்டில் பணியாற்றப் புறப்படுவது போல் அமைத்திருந்தார்கள்!

அலங்கார பவனிக்கு விளக்க உரை தந்த சென்னை அரசாங்கக் காரியதரிசி ஸ்ரீ எம். கே. செட்டூர் இதைப் பற்றிக் கூறும் போது, "நமது போலீஸார் சந்திர மண்ட

# அநுமகரத்வஜா

ஷட்குண மகரத்வஜா
சக்தி வாய்ந்தது



சுத்தமான ஷட்குணத் தங்கத்திஞல் மிகவும் சிறிய அளவில் ஆனல் பிரமாத சக்தி வாய்ந்ததாக உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டுப் பிறகு மாத்திரை வடிவம் ஆக்கப்பட்டிருக்கிறது. உபயோகிப்பதற்கு மிகவும் சுலபம். மற்ற மகரத்வஜங்களை விடச் சக்தி வாய்ந்தது.

O★O

**14 மாத்திரைகள்**
ஒரு புட்டியில் இருக்கின்றன
*(7 முழு அளவுகள்)*

O★O

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா – பம்பாய் – கான்பூர்

*சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள் :*

**ஆர். எல். கௌடர் & கம்பெனி**
59, பந்தர் தெரு :: சென்னை-1

*ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள் :*

**சத்ய நாராயண பார்மஸி**
குமரி தெரு, விஜயவாடா-1 & விஜயநகரம்

# SOLDIN

SOLID PHENYLE
WITH D. D. T. AND CRESOL



# MANURIN

FERTILIZER TABLETS
COMPLETE PLANT FOOD





**INDIA ALKALIES LTD.**
5, GARSTIN PLACE, CALCUTTA-1

விசாரணைகளுக்கு :
மெஸர்ஸ் எ. வி. தாமஸ் & கோ.,
ஆலப்புழை கேரளா

# ஹெடன்ஸா




## மூல நோய்க்கு

**எங்கும் கிடைக்கும்**

*பர்மாவுக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள் :*

சுந்தரம் அண்டு கம்பெனி
358, மொகல் தெரு, ரங்கூன்

லத்தை அடைந்து புகழ் பெறுவார்கள் என்பதில் சந்தேகமில்லை!'' என்றார். இதில் மற்றவர்களுக்கும் சந்தேகம் இருப்பதற்கில்லை. ஏனெனில், நமது சென்னைப் போலீஸார் நட்சத்திர மண்டலத்திலேயே பாராட்டுதலைப் பெற்றுவிட்டபடியால், அருகிலுள்ள சந்திர மண்டலத்தில் பாராட்டுதலைப் பெறுவது ஒரு பிரமாத விஷயமே அல்ல! நட்சத்திர மண்டலத்து சினிமாக் கலைஞர்கள் சங்கம் சென்னைப் போலீஸாரின் சேவைக்கு இந்தத் திருவிழாவில் பாராட்டு அளித்ததோடு கேடயப் பரிசும் அளித்ததையே குறிப்பிடுகிறேன்.



சந்திர மண்டலத்துக்குச் சென்னை போலீஸ் புறப்படத் தயார்!

போலீஸாரும் திரைக் கலையில் தங்களுக்குள்ள ஆர்வத்தை ''உங்கள் நண்பன்'' என்ற படத்தின் மூலம் வெளியிட்டிருக்கிறார்கள். இந்தப் படத்தின் கதை வசனத்தைப் போலீஸ் துணை கமிஷனர் திரு பரமகுரு அவர்களே எழுதியிருக்கிறார். போலீஸ் சேவையை விளக்கும் பிரசாரப் படமானாலும் அலுப்புத் தட்டாமல், விறுவிறுப்பாய் ஓடுகிறது.

இதைத் தவிர கலை நிகழ்ச்சிகளுக்கெல்லாம் சிகரம் வைத்தது போல் விளங்கியது ''காவலர் கடமை'' என்ற நாடகம். திரு சிவாஜி கணேசன், திருமதி எம். என். ராஜம் ஆகிய பெரிய நட்சத்திர நடிகர்களும், நடிகைகளும் பங்கெடுத்துக் கொண்டார்கள். காவலர் கடமையைக் காவலர்களுக்கு எடுத்துரைப்பது போல், பொதுமக்களுக்கும் தெரியப்படுத்தித் தங்கள் கடமையை நாடகத்தில் திறம்பட நிறைவேற்றி வைத்தார்கள்!

போலீஸ் துறையிலுள்ளவர்கள் குழந்தைகளின் கல்வி வசதிக்காகவும், அவர்களில் கஷ்ட நிலையிலுள்ள குடும்பங்களின் உதவிக்காகவும், தாராள சிந்தையுடன் பல பிரமுகர்கள் நிதி உதவி அளித்திருக்கிறார்கள்.

இந்த விழாவை யொட்டி, போலீஸ் வளர்ச்சியின் நூற்றாண்டு சரித்திரத்தைத் தொகுத்து புஸ்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள். இந்த வெளியீட்டை துணை ஐ.ஜி. திரு எப்.வி. அருள் ஆலோசனையுடன் போலீஸ் உதவி சூபரின்டென்டு திரு கே. ஜி. நாராயணசாமி, குற்ற இலாகா இன்ஸ்பெக்டர் திரு பி.என். வெங்கடரமணி ஆகியோர் தயாரித்திருக்கிறார்கள்.

சென்னையில் மட்டுமல்லாமல் தமிழ் நாடு முழுதும் எல்லா ஊர்களிலும் இந்தப் போலீஸ் விழா கொண்டாடப் பட்டது. பெயர் அளவுக்குத்தான் இது ''போலீஸ் விழா'' போன்று காணப்பட்டதே தவிர, பொது மக்கள் நடத்திய விழாவாகவே நெடுகிலும் விளங்கிற்று என்று கூறவேண்டும்.

நமது போலீஸ் துறை இன்னும் பல நூற்றாண்டு விழாக்களைக் கொண்டாடிக் கொண்டு நீடூழி வாழ்வதாக!

## ராஜாஜி செய்தி

சென்னை போலீஸ் படையானது மொத்தத்தில் ஒரு முதல்தரமான ஸ்தாபனமாகும். இந்தக் கீர்த்தியை அது நெடுகிலும் நிலைநிறுத்துமாக. திறமை, நேர்மை இவ்விரு குணங்களும் இப் படையில் மேலிருந்து கீழ் வரை மிக அவசியமானவை. இந்த இரு குணங்களும் அரசாங்கத்தின் இதர துறைகள் எல்லாவற்றையும் விட, போலீஸ் துறையில், அதிகம் இருப்பதாகத் தோன்றுவது சந்தோஷத்தை அளிக்கிறது. எதேச்சாதிகாரப் போக்கு உதவாது. போலீஸ் அதிகாரிகளும் ஊழியர்களும் எதேச்சாதிகாரப் போக்குக்கு இடம் தரலாகாது. எந்த அரசியல் கட்சியாயிருந்தாலும் சரி, அல்லது ஆளும் கட்சியாயிருந்தாலும் சரி இந்தப் போக்குக்கு இடம் அளிக்கக் கூடாது. போலீஸார் அணியும் உடையே நேர்மை, திறமை இவற்றின் சின்னமாக விளங்க வேண்டும்.

ஒரு புத்திமதியுடன் இதை முடித்துக் கொள்கிறேன். ஒவ்வொரு போலீஸ்காரரும் பொதுமக்களை அணுகும்போது அன்புடன் பேசி அவ்வாறே நடந்து கொள்வதை ஒரு கலையாக வளர்க்க வேண்டும்.

அத்தியாயம் 45

# அதிர்ச்சி

உஷாவுக்கு வீட்டை நெருங்கும் போதுதான் கொஞ்சம் கவலையாக இருந்தது. செக்கைப் பற்றின விஷயம் பெரிய விபரீதமாகிவிடப் போகிறதே என்று அஞ்சினாள். எதையும் தீர யோசிக்காமல் அதை அவசரப்பட்டுக் கிழித்து எறிந்தது அவளுக்கே ஏற்ற தாகப் படவில்லை.

இருந்தாலும் செக்குகளைப் பற்றிய விவரங்களெல்லாம் அவளுக்குத் தெரியும். அது காணாமல் போயிருந்தால் தான், யார் கையில் கிடைத்து விடுகிறதோ என்று முன்னெச்சரிக்கையாகப் பாங்குக்கு அறிவித்து, அதை மாற்ற முடியாமல் செய்ய வேண்டியதாக இருந்திருக்கும். அதைக் கிழித்துப் போட்டது பற்றிக் கவலையில்லை. பணத்தை மாற்றிக்கொள்ளாததற்காக யாராவது வருத்தப்படுவார்களா?

ஆனால் இது கொடுத்தவனை அவட்சியப் படுத்துவதுபோல் ஆகும். கொடுத்தவனுக்கு இது அற்பத் தொகையாக இருக்கலாம். ஆனால் இந்த அவமதிப்பு அத்தனை அற்பமானதாகப் போய் விடுமா? இந்தச் செக்கை அவள் ஒரு பொருட்டாகக் கருதவில்லை என்பதைக் காட்ட வேண்டும் என்றுதான் அவளுக்கு ஆசை. ஆனால் இதன் காரணமாக வேறு விளைவுகள் உண்டாகாமல் இருக்க வேண்டுமே!

இது தன் தந்தை வரையில் போகாது என்ற எண்ணம் மட்டும் அவளுக்கு எப்படியோ இருந்தது. போய்விட்டால் தொந்தரவுதான். ஒரு நாளைக்கு ஆயிரம், இரண்டாயிரம் என்று பீஸ் வாங்கும் அவருக்கு இந்த ரூபாய் ஒரு பெரிய தொகையல்லதான். ஆனால் இதைக் கொடுத்தவன் என்ன, சாதாரணமானவனா? அவன் அவருடைய கண்ணியமுள்ள கட்சிக்காரனாயிற்றே! அப்படிப் பட்டவனுடைய மனத்தைப் புண்படுத்தக்கூடிய ஒரு காரியத்தைச் செய்யலாமா? பணத்தைவிட இது அவருக்குப் பெரிய விஷயமாகப் படும் என்பதில் என்ன சந்தேகம்? கண்ணபிரான் கல்லூரிக்கு வந்ததும் உறையைக் கொடுத்து விட்டுச் சென்றதும் அவளுக்குப் பிடிக்காமல் இருக்கலாம். ஆனால் அது என்ன, அவ்வளவு பெரிய முறைப்பிசகான காரியம்? அப்படியே இருந்தாலும் அவள் முதலில் அவரிடம் சொல்லிவிட்டு அல்லவா, மறு காரியம் பார்க்க வேண்டும்? இது ஏன் அவளுக்கு எட்டவில்லை?

பங்களாவை அடைந்ததும் அங்கே அவளுக்கு மற்றோர் அதிர்ச்சி காத்திருந்தது. கண்ணபிரான் அவளுக்கு முந்தி அங்கே வந்திருப்பதை அறிந்ததும் அவள் கலக்



கம் அதிகமாகிவிட்டது. அவள் செய்த காரியத்தைவிட, அவள் செய்தது பெரிய குற்றமாகப் படும் என்று அவளுக்கே தோன்றியது. அப்பா வரையில் இது போகாமல் இருக்க வேண்டுமே என்று எண்ணியவாறு அவள் பூனைபோல் உள்ளே நுழைந்து சென்றாள். வந்த சுவடு தெரியாமல் உடைகளைமாற்றிக்கொண்டு, கைகால்களைக் கழுவிக் கொண்டு, பொன்னியைக் காணச் சென்றாள். நேரம் செல்லச் செல்ல, அவள் நெஞ்சு திடப்பட்டுக் கொண்டு வந்தது.

"ஏன் என்னமோபோல் இருக்கே, குழந்தை?" என்று உண்மையான பரிவோடு கேட்டாள் பொன்னி.



மனித இதயம்தான் எத்தனை நுண்ணியது! அன்பான ஒரு சொல்லைக் கேட்க அது எத்தனை ஆவலாக இருக்கிறது? அந்த ஒரு சொல்லைக் கேட்டு அது எத்தனை பலம் பெற்றுவிட்டது! அப்பாவின் ஆயிரம் கோபத்தையும் தாங்கிக் கொள்ளக் கூடிய சக்தி பெற்றுவிட்டதாக அவள் உணர்ந்தாள்.

"தலையை என்னவோ இலேசாக வலிக்கிறது, பொன்னி! காலேஜிலே இன்றைக்குப் பாடம் அதிகம், அதனால்தான் போலிருக்கிறது! தொட்டுப் பாரேன், ஏதாவது தெரிகிறதோ என்று!"

பொன்னியின் கையை எடுத்து, தன்னுடைய நெற்றிப் பொட்டில் வைத்துக் கொண்டாள் உஷா.

"கை... கை... அடுப்புக் காரியமாய் இருந்த அழுக்குக் கையால் தொடச் சொல்றியே!" என்று பொன்னி கையை இழுத்துக் கொள்ள முயன்றாள். பிறகு எல்லாம் தெரிந்தவளைப்போல், "அதெல்லாம் ஒண்ணுமில்லே. இந்த டிபனை எடுத்துக்கிட்டு, சூடா ஒரு வாய் காப்பியைக் குடிச்சா, எல்லாம் சரியாகப் போயிடும்!" என்றாள், கையைத் தலைப்பில் துடைத்துவிட்டு, நெற்றிப் பொட்டை மிருதுவாகப் பிடித்துப் பார்த்துக் கொண்டே.

'அப்பா! எவ்வளவு மிருது! என்ன சுகம்!'

"பொன்னி! உங்கிட்டே எனக்கு எவ்வளவு கோபம் வருகிறது, தெரியுமா?"

"ஏன், எதுக்குக் கோபம்?"

"நீ ஏன் என் அம்மாவாக இல்லே? உன் வயிற்றில் நான் ஏன் பிறக்கவில்லே? பிறந்திருந்தால் தினம் இந்த மாதிரி டிபன் செய்து, உன் கையால் சாப்பிடுவேனே, இல்லையோ?"

பொன்னியின் உள்ளம் இதைக் கேட்டுப் பொங்கியது. அவள் மூச்சுத்திணற, "இப்ப மட்டும் என்ன? நான்தானே உனக்குக் கொடுக்கிறேன்!" என்றாள்.

"இது ஒன்றும் அப்படியில்லே, போ! அப்படியாகுமா, இது?" என்று தட்டிலே ஸ்பூனைக் கோபத்துடன் தூக்கிப் போட்டாள் உஷா.

"சரி—இதென்ன பச்சைக் குழந்தை மாதிரி!" என்று உஷாவின் தலையை வருடினாள் பொன்னி. "காலையிலே ஒரு வாய் அள்ளிப் போட்டுக்கிட்டுப் போனியே, அதுதானே — பசி மூத்திப் போயிருக்கும்!" பொன்னி உண்மையில் பெற்றெடுத்த அன்னையைப் போலவே மாறிப் போய் நின்றாள்.

மேலும் முரண்டு பிடித்தால்,பொன்னி ஸ்பூனை எடுத்து, குழந்தைக்குப் புகட்டுவதுபோல் கொடுக்கத் தொடங்கினாலும் தொடங்கி விடுவாள் என்று உஷாவுக்குத் தோன்றியது. "பொன்னி, இந்த வீட்டுப் பாஸந்தியைவிட, நீ அன்போடு உன் குழந்தைக்குக் கொடுப்பாயே அரிசிக் கஞ்சி, அது எனக்கு அமிர்தம்போல் இனிக்கும்!" என்றாள் அவள்.

பொன்னி உரக்கப் பேசாதிருக்கும்படி வாயைப் பொத்தி, மாடியைச் சுட்டிக் காட்டினாள். பிறகு, "இதெல்லாம் எத்தனை நாளைக்கு? கொஞ்ச நாளைக்குத் தானே!" என்றாள்.

"ஏன் கொஞ்ச நாள் என்கிறாய்? அப்புறம்...?"

"அப்புறம் உனக்குக் கல்யாணமாகி நீ புருஷன் வீடு போயிடப் போறே!"

உஷா இதைப் பற்றி இதுவரையில் யோசித்ததேயில்லை. பொன்னி அவளைச் சரியாக மடக்கி விட்டாள்.

"என் வயித்திலே வந்து பிறந்திருந்தா அரிசிக் கஞ்சிதான் குடிக்கலாம். ஆனால் இப்படிப்பட்ட மாப்பிள்ளை கிடைப்பானா?" என்று மேலும் மடக்கப் பார்த்தாள் பொன்னி.

அவள் பேச்சைக் கேட்டு உஷாவுக்கு ரோசம் பொத்துக்கொண்டு வந்தது. "சரி, சரி, உன் வாயை மூடிக் கொள். இப்படிப்பட்ட மாப்பிள்ளை எனக்குக் கிடைக்க வேண்டும் என்று உனக்கு ஆசையாக இருக்கிறதோ? இந்த ஆசையை உன்னோடு வைத்துக் கொள். எனக்கு வேண்டாம். இந்த வீட்டில் என்னவோ நான் பிறந்து விட்டேன். இது என்னுடைய குற்றமல்ல; ஆனால் தெரிந்து நான் இப்படிப்பட்ட தவறு செய்ய மாட்டேன். பங்களாவில் மனிதத் தன்மை இல்லாமல் வாழ்வதைவிட ஏழைக் குடிசையில் வாழ்வதையே நான் விரும்புவேன். எனக்கு அன்பு வேண்டும். பொன்னி, உண்மையான அன்பு வேண்டும். அது எங்கே கிடைக்காதோ, அங்கே இருக்க நான் விரும்பமாட்டேன். எனக்கு வேண்டியது அன்பு ஒன்றுதான்; பணமல்ல; பங்களாவல்ல; கார் அல்ல; பேர் அல்ல. இவர்கள் எல்லாம் அன்பைக் காசுக்கு வாங்க எண்ணுகிறவர்கள். இதெல்லாம் சொன்னால் உனக்கு எங்கே புரியப் போகிறது? உன்னிடம் போய்ச் சொல்ல வருகிறேனே! நகையை அடகு பிடிக்கிறார்களே, அதைப் போல் மனச் சாட்சியை விட்டு விட்டு அன்பை அடகு பிடிக்கிறவர்கள் இவர்கள். இந்த மாப்பிள்ளைக்கு எத்தனையோ பெண்கள் கிடைப்பார்கள். தெரிந்ததா? இன்னொரு தடவை இப்படிச் சொல்லாதே!" என்று ஆவேசத்துடன் பேசினாள்.

திருட்டுப் பாலைத் தேடி வரும் பூனையைப் போல், இப்படிப்பட்ட நேரங்

# இப்பொழுது நடைபெறுகிறது



ஜயந்தியின்

# வாழ்க்கை ஒப்பந்தம்





சென்னை
கெயிட்டி
பாரத்
மஹாலக்ஷ்மி
மற்றும் தென்னாடெங்கும்

தயாரிப்பு & டைரக்ஷன்:
K.V.ரெட்டி B.Sc.,(HONS)

HAMSA'S

உரிமையாளர்கள்: மஹாலக்ஷ்மி பிக்சர்ஸ், மதராஸ்.












Vasmol
HAIR DARKENER





களில் எப்படியோ வந்து நிற்கும் சாமர்த்தியம் சொர்ணம்பாளுக்கு இருந்தது. அவன் எப்பொழுது வந்து நின்ருனோ, இருவருமே அதைக் கவனிக்கவில்லை. ஆனால் பேச்சு முடிந்த பிறகு தான் பொன்னி அவனைக் கவனித்தாள். உஷாவும் கவனித்தாள். சொர்ணம்பாள் மிகவும் சாதுவான பசுவைப் போல் நின்று கொண்டிருந்தாள். அரைக்கண் பார்வையாலேயே அவர்களை எடுத்து விழுங்கி விடுபவளைப் போல் அமைதியாக நின்ருள்.

அவள் நின்ற நிலையைப் பார்த்துப் பொன்னிதான் நடுங்கினாளே தவிர, உஷா சிறிதும் லட்சியம் செய்யாமல் இருந்தாள். ஒரு விதத்தில் இது அவளுக்கு ஆறுதலைக்கூடத் தந்தது. யாரிடம் போய் எரிச்சல் தீர இதையெல்லாம் சொல்ல வேண்டுமோ, அவளே வந்து கேட்டதில் அவளுக்கு மகிழ்ச்சிதான்.



சென்னை ராஜ்ய பூப்பந்தாட்டச் சங்கத்தினர் சமீபத்தில் தலைசிறந்த விளையாட்டுக்காரர்களை வரவழைத்து ஆடச் செய்து சென்னை ரஸிகர்களுக்கு விருந்தளித்தனர். பூப்பந்தாட்டப் போட்டியில் மூன்று வெள்ளிக் கோப்பைகள் வென்ற திரு கரீம் தலைவரிடமிருந்து பரிசு பெறுகிருர்.

"பேச்செல்லாம் முடிந்ததா?" என்று பதருமல் கேட்டாள் சொர்ணம்பாள்.

"இப்போதைக்கு முடிந்தது!" என்ருள் உஷா.

"இதெல்லாம் காலேஜ் படிப்போ?"

"இல்லை! இதெல்லாம் வீட்டுப் படிப்பு. காலேஜ் படிப்பு வேறு தனியாக இருக்கிறது!"

"தோட்டத்துக்கும் சேரிக்கும் வீட்டுக்குத் தெரியாமல் போய்ச் சுற்றுகிற படிப்போ அது?"

உஷா அதிர்ச்சியைக் காட்டிக் கொள்ளாமல், "இருக்கலாம்!" என்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

"அப்படியா அது! ஆனால் இந்த இரண்டு படிப்புக்குமே ஒரு முழுக்குப் போடச் சொல்ல வேண்டியதுதான்! வர வர, பேச்செல்லாம் அளவு மீறிப் போகிறதே! யாரிடம் போய், எதைச் சொல்வது, பேசுவது என்பதே கிடையாது போலிருக்கிறதே!,.... ஏண்டி பொன்னி, மரியாதையாக இந்த வீட்டில் இருக்க வேண்டும் என்று உனக்கும் உன் புருஷனுக்கும் எண்ணமா? இல்லை, இதை விட்டுப் போய்விட வேண்டும் என்ற எண்ணமா? இரண்டில் ஒன்று இன்றைக்கு வீட்டுக்குப் போவதற்குள் சொல்லிவிடு!" என்று முகம் சிவக்கக் கேட்டாள் சொர்ணம்பாள்.

உஷா முந்திக் கொண்டு வந்து, "நான் பேசினதற்கு அவள் என்ன செய்வாள்?" என்று எதிர்த்தாள்.

"நீ என்ன எல்லாம் தெரிந்த பெரிய மனுஷி; இவள் என்ன அதைக் கேட்டுத் தலையை ஆட்டிக் கொண்டிருப்பது?"

உஷா அமைதியான குரலில், "என் பேச்சைக் கேட்டுக் கொண்டிருப்பவர்களுக்கெல்லாம் அப்படியானல் இந்த வீட்டில் வேலை இல்லை; இல்லையா?" என்று கேட்டாள்.

சொர்ணம்பாள் அவ்வளவு முஸ்தீபுடன் பேச வரவில்லை. இருந்தாலும் அவள் விட்டுக் கொடுக்காமல், "வேலை இருக்கிறதோ, இல்லையோ, அதை அப்பாவைக் கேட்டுக் கொண்டு வந்த பிறகு பார்த்துக் கொள்ளலாம்!" என்று கூறி விட்டு, அங்கிருந்து புறப்பட்டுச் சென்ருள்.

தாய்க்கும் மகளுக்கும் நடந்த வாக்கு வாதத்தைக் கேட்டு, பொன்னி வாய் அடைத்து நின்ருள். உள்ளம் கிடந்து உதைத்துக் கொண்டது. ஒரு நியாயமும் இல்லாமல் சொர்ணம்பாள் தன்னைக் கடிந்து கொண்டதோ, மிரட்டியதோ கூட அவளுக்கு உதைப்பாக இல்லை; உஷாவுக்கு இதனால் என்ன கெடுதல் நேருமோ என்று அவள் பதைத்தாள்.

"இதென்ன குழந்தை, நீ கொஞ்சம் தணிஞ்சு போகப் படாதா? வயசானவங்களுக்கும் உனக்கும் வித்தியாசமில்லை? கடைசிலே பாத்தீல்லே, என்ன சொல் விட்டுப் போருங்கன்னு?" என்ருள் மிகுந்த வருத்தத்தோடு.

உஷா பேசாமல் உட்கார்ந்திருந்தாள். பிறகு, "உனக்கு வேலை போய்விடுமே என்று பயமாக இருக்கிறதா? அதெல்லாம் போகாது, கவலைப்படாதே! அப்

படிப் போகுமானால், நான் எங்கே போவேனோ, அங்கேதான் நீயும் வருவாய். அதனால் அப்படியே பிரண்டு போய் விடாதே. உலகம் எவ்வளவு பெரியது! அப்படியே போனால்தான், என்ன! செத்தா போய் விடுவோம்?'' என்றான் தைரியம் கூறுவதுபோல.

"எனக்கு என்னமோ பயமா இருக்கு, குழந்தை, பயமா இருக்கு! நீ என்னமோ லேசாச் சொல்லிப்பிட்டே, நீதான் எங்கே போவே? நான்தான் எங்கே போவேன்?'' என்று கவலையோடு கூறினாள் பொன்னி.

"அதைச் சமயம் வருகிறபோது சொல்கிறேன். நீ போய் உன் வேலையைப் பார்! அன்பை விலைக்கு வாங்கப் பார்க்கிறவர்கள் என்று சொன்னேனே, இவர்கள்தான்; பார்த்துக்கொள். அதிகாரத்தில் ஆளையே வாங்குகிறவர்கள்! அது அம்மாவாக இருக்கட்டும்; இன்னொருத்தியாக இருக்கட்டும். நியாயம் என்பது ஒன்றுதானே? பேசினது நான்; அதற்கு நீ வேலையை விட்டுப்போக வேண்டுமோ? தோட்டத்துக்குப் போகச் சொன்னது நான்; அதற்கு உன் புருஷன் வேலையை விட்டுப்போக வேண்டுமோ? இதற்கு நீ பயப்படுகிறாயா, பொன்னி? பாபுவை வேலையை விட்டு நிறுத்தினார்களே — அவன் கெட்டா போய் விட்டான்? அடிமை வேலை செய்வதில் அவ்வளவு ஆசையா உங்களுக்கு?''

உஷா இவ்வளவு தூரம் பேசுவாள் என்பது தெரியாத பொன்னிக்குப் பெருமூச்சுத்தான் வந்தது. இது மேலும் விபரீதமாகாமல் இத்துடன் நின்றுவிட வேண்டுமே என்று அவள் முண்டகக் கண்ணியையும் வெள்ளைப் பிள்ளையாரையும் எண்ணி வேண்டிக் கொண்டாள்.

மனத்திலிருந்த பாரமெல்லாம் தீர்ந்த பிறகுதான் உஷாவுக்கு அமைதி உண்டாயிற்று. செக்கைப் பற்றிய கவலை கூட அவளுக்கு இப்போது சிறிதும் இல்லை. தன்னுடைய அறைக்குள் நுழைந்ததுமே, அவளுடைய கண்கள் 'போர்ட்டிகோ'வைத்தான் கவனித்தன. கண்ணபிரானுடைய கார் எப்போதோ போய் விட்டிருந்தது. பிறகு அவள் மேஜை முன்னால் போய் உட்கார்ந்து கொண்டு, அன்று நடந்த பாடங்களைப் பிரித்து வைத்துப் படிக்கத் தொடங்கினாள். ஒரு வரியேனும் அவள் மனத்தில் பதிய வேண்டுமே! ஆனால் கையிலிருந்த புத்தகத்தின் பக்கத்தினுள்ளே பாபு வந்து தோன்றிச் சிரித்துக் கொண்டிருந்தான். தன்னம்பிக்கையும், தைரியமும் உடைய ஒருவனைத் தவிர, வேறு யாரால் இப்படிச் சிரிக்க முடியும்? அந்தச் சிரிப்பிலே அவள் சொக்கிப் போனாள்.

## அத்தியாயம் 46

# அன்று இரவு...

அன்றிரவு பொன்னிக்கு வேலைகள் எல்லாம் சீக்கிரமே முடிந்து விட்டன. எஜமானனும் எஜமானியும் சாப்பிட உட்கார்ந்திருந்த போது தன்னைப் பற்றி ஏதாவது பேச்சு வரும் என்றே தான் அவள் எதிர்பார்த்தாள். அதே போல் வரத்தான் வந்தது.

"இவள் என்ன, முன்னைப் போலெல்லாமா இருக்கிறாள்? அவள் பிரசங்கம் செய்கிறாள்; இவள் எல்லாம் தெரிந்தவள் மாதிரி தலையை ஆட்டிக்கொண்டிருக்கிறாள்!'' என்றாள் சொர்ணம்பாள்.

"அதுதான் சொல்கிறேனே — ஒழுங்காக இருந்தால் இருக்கட்டும். இல்லாவிட்டால் எல்லாருமாக ஓடிப் போய் விடட்டும்!'' என்றார் பரமசிவம்.

பொன்னி குனிந்த தலை நிமிராமல் பரிமாறிக் கொண்டிருந்தாள். இந்தப் பேச்சு இதற்கு முன்பே இவர்களுக்குள் நடைபெற்றிருக்கும் என்றுதோன்றியது.

"அடி பொன்னி, உன்னைத்தான்! காதிலே விழுந்ததா, ஐயா சொன்னது?'' என்று கேட்டுவிட்டு, தன் கணவனிடம், "உங்களுக்கு முன்னாலேயே நான் கண்டித்துச் சொல்லிவிட்டேன்!'' என்றாள்.

"அதுதான் சரி. ஒழுங்கு மீறினால் அப்புறம் இங்கே என்ன வேலை?'' என்று மனைவி செய்த காரியத்தை முழு மனத்தோடு பாராட்டினார் பரமசிவம்.

நடுவில் தொடங்கிய பேச்சு நடுவிலேயே நின்று விட்டது. ஆனால் உஷாவின் விஷயமாக அவர்களுக்குள் ஒரு முடிவு ஏற்பட்டு விட்டதாக, சொர்ணம்பாள் பேசிய தொகுசிலிருந்தே ஊகித்துக் கொண்டாள் பொன்னி.

வேலையெல்லாம் முடிந்து, போய் நின்றதுமே, "போய் விட்டு, காலையில் சீக்கிரமே வந்துவிடு!'' என்று தாம்பூலக் கிறக்கத்தோடு விடை கொடுத்தாள் எஜமானி. வழியில் பாரிஸ்டர் காத்திருந்த எஜமானியைப் பார்க்க வருவதையும் கண்டாள். இன்று இருவரும் வழக்கத்தைக் காட்டிலும் உற்சாகமாகவும் சுமுகமாகவும் இருப்பதாக எண்ணிக் கொண்டே அவள் மோட்டார் ஷெட்

பாங்கியிலுள்ள பணம் முடங்கிக் கிடப்பதில்லை

தொழில், வியாபாரம், வர்த்தகம்

இவைகளை இயக்க உதவுகிறது

***

# இந்தியன் பாங்க் லிட்.

(தலைமைக் காரியாலயம்: முதல் லைன் பீச், சென்னை-1)

உள்ளூரிலுள்ள 23 காரியாலயங்களுடனும்
113 கிளைக் காரியாலயங்களுடனும்

இந்தியாவின் பொருளாதார அபிவிருத்திக்குத் தன்னுடைய
பங்கைத் தொடர்ந்தாற்போல் அளித்து வருகின்றது

---

சென்னை

ஜார்ஜ் டவுன்

வட்டாரத்தில்

ஏர் கண்டிஷன்

செய்யப்பட்ட



வரவேற்புக் கூடம் ❖ சாப்பாட்டு அறைகள் ❖ தங்கும் அறைகள்

குளிப்பதற்கான வசதிகள் இணைந்த அறைகள்

மற்றும் எல்லா நவீன வசதிகளும் உள்ள முதல்தரமான ஒரே ஹோட்டல்

# அம்பீஸ் கபே

போர்டிங் & லாட்ஜிங்

(புதுக் கட்டிடத்தில்)

6 & 7, பிராட்வே - - - சென்னை-1

வாயிலில் உட்கார்ந்திருந்த கணவனைத் தேடிக் கொண்டு வந்தாள்.

அவளுக்குப் பொறுக்கவில்லே. "ஆறுனைப் பட்டவங்கள்ளாம் பாலியம் திரும்பி நிக்கிறங்களாம். நீ என்னமோ கன்னத்திலே கையை வச்சுக்கிட்டு இடிஞ்சு போய்க் கெடக்கிறியே!" என்று வந்ததும் வராததுமாக அவனை இடித்துக் கூறினுள். எஜமானியம்மாளின் தாம்பூல தாரணமும், அதனைச் 'சொப்புச் சொப்' பென்று சுவைத்துக் கொண்டே அவள் விடை கொடுத்தனுப்பிய சுருக்கும் அவளுடைய கவலையை யெல்லாம் போக்கடித்து விட்டன. இல்லாவிட்டால் அவளும் குப்பனைப் போலவே சோர்ந்து போய்த்தான் வந்திருப்பாள். அள்ளிக் கொண்டு வந்திருந்த வாசனைப் பாக்கையும் வெற்றிலே - சுண்ணும்பையும் வெளியிலே எடுத்திருக்கவே மாட்டாள்.



திருப்பத்தூர் பிரபல அட்வகேட் ஸ்ரீ டி. எஸ். வேங்கடராமய்யர் அவர்களின் சஷ்டியப்த பூர்த்தி சமீபத்தில் சிறப்பாக நடைபெற்றது. இந்த வைபவத்துக்குச் சேங்காலிபுரம் பிரும்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் வந்திருந்து, உபன்யாசம் செய்து சிறப்பித்தார்.

"புறப்பட்டுட்டியா என்ன?"

"பின்னே நான் சொல்றது உனக்குப் புரியலியோ?"

"ஏது, இன்னிக்கு மழைதான் வரப் போவுது, போ! இவ்வளவு சீக்கிரமாப் போனு நமக்குச் சுத்தியில்லே கொட்டு வாங்க!" என்ருன் குப்பன். அவனுக்கு இருந்த கவலையில் இவ்வளவு பேசியதே பெரிய வியப்புத்தான்.

"சரி; இந்தா, பிடி கொஞ்சம்! போட்டுமென்னுக்கிட்டே நடக்கலாம்!" என்று கையிலிருந்த பாக்கை அவனுக்குப் பகிர்ந்து கொடுத்தாள். வெளி வாசலேத் தாண்டுமுன்னே வெற்றிலேயில் சுண்ணும்பைத் தடவி மடித்துக் கொடுத்தாள். "அம்மாளுக்கு ஐம்பது வயசுக்கு மேலே ஆவுதின்னு பாக்கிறியா? சுந்தரிக்கு இன்னெரு தங்கச்சி கூடப் பொறக்கும், பாரேன்!" என்ருள்.

"என்ன உனக்கு, இன்னிக்கு?"

"அதைத்தானே நானும் உன்னைக் கேக்கணும்னு நெனச்சேன். என்னத்தையோ பறிகொடுத்திட்டவனைப்போல, சாவாடு செத்து நடந்து வறியே!" என்ருள் பொன்னி.

"ஏது, இனிமே எனக்குத் தோணலே, பறிகொடுத்திட்டவனைப் போலன்னியே, சரியான பேச்சுத்தான்! எங்கிட்டே ஐயா வெச்சிருந்த நம்பிக்கையைத்தான் பறி கொடுத்திட்டேன். ஆச்சு, இனி நாளை எண்ணிக்க வேண்டியதுதான். அவ்வளவுதான் இங்கே நமக்கு வேலே!" என்ருன் குப்பன்.

பொன்னி கலகல வென்று சிரித்து விட்டு, "ப்பூ—இதுக்குத்தானு? நானும் என்ன மோன்னு பாத்தேன். எவக்கும் இன்னிக்குப் போன வேலேதான். ஆனு போக இருந்த சுருக்கிலேயே மறுபடியும் வந்திட்டுது. ஆமா, நீ என்ன தப்புச் செஞ்சே?" என்ருள்.

"என்ன செஞ்சேனு? இன்னும் என்னு செய்யணும்? அம்மா என்னமோ மிரட்டிக் கேட்டாங்க; உளறிக் கொட்டிப்பிட்டேன்! குழந்தையைத் தோட்டத்துக்கு அழைச்சிட்டுப் போனது, சுத்தினது எல்லாத்தையும் சொல்லி ஒப்புக்கிட்டேன்!"

"நீதான் சொன்னதா அது? அதான் அம்மா அப்படிக் கேட்டாங்களா?"

பொன்னி, மாலேயில் நடந்ததையெல்லாம் ஒன்று விடாமல் வர்ணித்தாள் அவனிடம். அப்புறம் அது சாப்பாட்டு நேரத்தில் தீர்ந்துபோன விவரத்தையும், இப்பொழுது வரும்போது, சீக்கிரம் வந்துவிடும்படி எஜமானியம்மாள் சொன்னதையும் கூறினுள். அதற்குப் பிறகு தான் குப்பனுக்கும் சிறிது தெம்பு வந்தது.

"ஆனு ஒண்ணு! பாபு பேச்சையே நான் எடுக்கலே. அவங்களுக்கும் அவன் அங்கே இருக்கிறது தெரியாது! தெரிஞ்சிருந்தா நிச்சயம் சீட்டே கிழிஞ்சிருக்கும்!" என்று நடுவிலே குப்பன் சந்தோஷமும் பட்டுக் கொண்டான்.

"ஆமா, நான்தான் கேக்கறேன். சீமான் வீட்டுப் பிள்ளே ஒண்ணு வந்து தவசு செய்துக்கிட்டு இருக்கறப்போ, நம்ப குழந்தை ஏன் தோட்டத்தையும் பாபுவையும் சுத்த வருது? இது ஏற்காத சங்கதிதானே! அவங்க சொல்லுங்கன்னு, சொல்ல மாட்டாங்களா, பின்னே? எங்கே இருக்கிற பொண்ணு,

எங்கே வந்து நிக்கிறது? இது தெரிய வேணும் அதுக்கு? அட அதுதான் குழந்தைப் புள்ளே! நீயாச்சும் புத்தி சொல்ல வேணும்?''

''புத்தி...இ...சொல்லணுமா? யாருக்கு — உஷாவுக்கா? அதுவா குழந்தைப் புள்ளே? நம்மைப் போல லட்சம் பேருக்கு அது புத்தி சொல்லுமே. ஐயாவையும் அம்மாவையும்போல் ஆயிரம் பேருக்கு அதுக்குப் புத்திசொல்லத் தெரியுமே! தோட்டத்துக்கு வந்து, பாபுவைப் பாக்க வந்தா, அதைத் தப்பா நெனச்சுடறதா? அதுக்கு ஏழைங்கன்னு எத்தனை இரக்கம்னு எண்ணிப் பாக்க வேணுமா?''

''சரி; அப்ப அந்த மைனரு சிமோனைக் கண்டா அதுக்குப் பிடிக்காமே போவானேன்? அதற்கு ஏதாவது காரணம் இருக்கணுமில்லே!''

''அதை என்னை வந்து கேட்டா? ஓர் ஆளைப் புடிக்காததுக்குக் காரணம் வேறே இருக்கணுமா? அன்னிக்கு ராத்திரிக்கு அந்த மைனரு விருந்து நடத்தினாருல்லே, அப்ப அவுரு காரை எடுத்துக்கிட்டு எங்கே போனாருன்னு எனக்குத் தெரியும். டான்ஸ் நடந்த அன்னிக்கே பாதியிலே அவுரு யாரோடே போனாரு, எங்கே போனாருன்னு எனக்குத் தெரியும். அவுரு டிரைவரே எங்கிட்டே சொல்லிப் புட்டான். ஆனால் நான் வெளியிலே இதைச் சொல்லல்லே. ஏன் தெரியுமோ? நமக்கு ஏன் பெரிய இடத்துப் பொல்லாப்பு எல்லாம்? அதனாலேதான் சரியாத் தெரிஞ்சுக்காமே வெளியிலே விடப்படாதுன்னு பேசாமெ இருந்திட்டேன்! போதுமா? ஆக, ஒரு பொண்ணுக்குப் பிடிக்கலேன்னு அதுக்கு மேலே நாம தலையிடக்கூடாது. அதுக்கு மனசிலே என்ன பட்டிடுச்சோ, என்னமோ! இதைப் போய்க் கேட்க முடியுமா?''

பொன்னியும் குப்பனும் இவ்வாறு பேசிக்கொண்டே பாஞ்சாலியின் குடிசை வாயிலில் வந்து, கரையேறினார்கள். குடிசை இருளிலே ஆழ்ந்து கிடந்தது.

''பகல்லே பக்கம் பாத்துப் பேசு; ராவிலே அதையும் பேசாதேம்பாங்க. அதனாலே இனிமே பேசாமெ வா!'' என்று முன்னால் போனாள் பொன்னி.

பொன்னி நேராகத் தன் குடிசையை நோக்கி நடந்தாள். குப்பன் இளைஞர் சங்கத்தை நோக்கி நடந்தான். சங்கத்தை அடைந்ததுமே, சாலையில் ஒரு மோட்டார் நின்று கொண்டிருப்பது தெரிந்தது. குப்பன் அந்த வண்டியை அடையாளம் கண்டு கொண்டு விட்டான். அவனுக்கு இது பெரிய வியப்பாக இருந்தது. மைனர் கண்ணபிரானுடைய வண்டிக்குத் தோட்டத்தில் என்ன வேலை?

''யாரு, டிரைவர் அண்ணனா?'' என்று வண்டிக்குள்ளிருந்து குரல் ஒன்று வந்தது.

''ஆமா, கேக்கறது யாரு?''

''நான்தான் பக்கிரி!''

''யாரது, பக்கிரி? எந்தப் பக்கிரி?''

''மீசைப் பக்கிரி! வேறெ எந்தப் பக்கிரி இங்கே வரப் போறான்? நம்ப பயலைப் பாக்க வந்தேன். ஆனால் யாரையும் இங்கே காணலையே!'' என்றான் அவன் அலட்சியமாக.

குப்பனுக்கு ஒருபுறம் இது ஆச்சரியமாகவும் மறுபுறம் எரிச்சலாகவும் இருந்தது. அவன் வந்த விஷயத்தை மெதுவாக அவனிடமிருந்தே கேட்டு வாங்க எண்ணி, ''யாரு, பாபுவைச் சொல்றீங்களா? எங்கேயும் அவன் போயிருக்க மாட்டான். இப்ப வந்திடுவான். அதுவரையிலே பேசிக்கிட்டிருக்கலாமே; இறங்கி வாங்களேன்!'' என்று அழைத்தான் குப்பன்.

மீசைப் பக்கிரி, முன்னைப் போலவா இருந்தான்? காரில் ஏறத் தகுந்த தகுதியும் சிறப்பும் ஏற்பட்டு விட்டவன்போல் ஆடம்பரமாக இறங்கி வந்தான்.

இருவரும் சங்கத்தின் வாசலிலேபோய் உட்கார்ந்து கொண்டார்கள். ஆனால் பாபு அன்று இரவு அங்கே வரமாட்டான் என்பதை அவர்கள் எப்படி அறிவார்கள்?

(தொடரும்)

# எச்சரிக்கை!



## இன்றைய ஜலதோஷம் நாளை ப்ளு, பிராங்கைடிஸ் அல்லது நிமோனியாவாக மாறலாம்!

கடும் வியாதி ஆரம்பமாகு முன்னரே உடனடியாக உங்கள் ஜலதோஷ அவஸ்தைகளை ஒழித்துக் கட்டுங்கள். ஜலதோஷங்களுக்கென்றே விசேஷமாக தயாரிக்கப்பட்ட இந்த சக்தி வாய்ந்த மருந்தை தடவிக்கொள்ளுங்கள்.

உங்கள் குழந்தையின் ஆரோக்கியத்தை விஷப்பரீட்சை செய்யாதீர்கள். ஜலதோஷத்தின் முதல் அறிகுறிகள் — தும்மல், ஒழுகும் மூக்கு அல்லது தொண்டை உபாதை—தோன்றின உடனே, படுக்குமுன் விக்ஸ் வேபோரப்பை மார்பிலும், தொண்டையிலும், முதுகிலும் தேயுங்கள். உடனேயே மூக்கு, தொண்டை, மார்பு இவைகளில் ஆஸ்வாஸம் அடைவதை உணர்வீர்கள். மேலும் நீங்கள் நிம்மதியாக இரவு முழுவதும் தூங்கும் பொழுதே, இந்த நிருபணமான மருந்து சளி உபாதைகளை விரட்டியடிக்கிறது. மறுநாட் காலையில் உங்கள் ஜலதோஷம் நீங்கி சுகம் பெறுவீர்கள்.

**விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தை சீக்கிரம் போக்குகிறது . . . 2 விதங்களில்**

**1** மூக்கின் வழியே வேலை செய்கிறது.

விக்ஸ் வேபோரப் வெளிவிடும் சக்தி வாய்ந்த ஔஷத ஆவிகள், நீங்கள் சுவாசிக்கும்போது உள்ளே போய் மூக்கிலும் தொண்டையிலும் உள்ள சளியையும் வலியையும் நீக்குகிறது.

**2** சருமத்தின் மூலமாக வேலை செய்கிறது.

விக்ஸ் வேபோரப்பின் நிம்மதி தரும் உஷ்ணம் மார்பகத்தில் அடைப்பை உடைத்தெறிகிறது. நீங்கள் துரிதமாக குணமடைகிறீர்கள்.




# விக்ஸ் வேபோரப்

மார்பிலும், தொண்டையிலும், முதுகிலும் தேயுங்கள். எல்லோருக்கும் நல்லது.

VR-6



### அஸி''ஸ்டண்ட்''

விளம்பரம் நான் நடித்த படங்களுக்கெல்லாம் வர வேண்டிய பாக்கியை வசூலித்துத் தர ஒரு ''ஸ்டண்ட்'' நடிகர் தேவை.

— நடிகர் ஏமாளிகுமார்



### வேட்—டீ

''என்னப்பா, ஒரு கப் டீயா இது? அரை கப்தானே இருக்கிறது?''

''பாக்கி அரை கப்பும் அங்கேதான் இருக்கிறது! உங்கள் வேஷ்டியைப் பாருங்கள்!''



### ''நடை—உபாதை!''

தொண்டர்: நான் கால்நடையாகவே டில்லிக்குப் போகப் போகிறேன்!

நண்பர்: ஏன்! மனிதராகவே போவதுதானே!



### ''கத்தா நாயகன்!''

''நாடகக் கதாநாயகன் என்பதால் இப்படிக் கத்தித்தான் பேச வேண்டுமா? கொஞ்சம் மெதுவாகத்தான் பேசுமே? ஏன் தொண்டை கிழியக் கத்துகிறீர்—வந்திருப்பவர்கள் தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு?''



### ''பலே வைத்தியர்!''

நோயாளி: (வைத்தியரிடம்) காது ரொம்ப மந்தமாக இருக்கிறது. நான் இருமுவது எனக்கே கேட்பதில்லை!

வைத்தியர்: அப்படியா? இந்த மருந்தைச் சாப்பிடுங்கள் சரியாகி விடும்!

நோயாளி: என்னங்க! இதைச் சாப்பிட்டால் காது சரியாகக் கேட்குமா?

வைத்தியர்: அதில்லே, இருமல் பலமாக வரும்!



கடிதம் நீட்டினான். கிடுகிடுவென்று அவன் பெயரும் புகழும் ஏற்றம் கண்டது, இசை உலகிலே. மாதத்திலே ஒருவாரம் கூட வீட்டிலே தங்க நேரமில்லை. சதா சுற்றுப் பயணம் செய்த வண்ணம் இருந்தான், கச்சேரிக்காக.

ஆரம்பத்திலே மங்களம் அடைந்த ஆனந்தத்துக்கு அளவே இல்லை. தன் கணவனுக்கா இத்தனை புகழ்?

"இதோ இவள்தான் பிரபல சங்கீத வித்வான் கைலாசத்தின் மனைவி" என்று நாலுபேரிடம் தன்னை அறிமுகம் செய்து வைக்கும்போது, அவள் உள்ளம் பூரித்தது. தன் கணவன் எல்லோரையும்போல் ஒரு குமாஸ்தாவாக இருந்திருந்தால், தனக்கு இத்தனை மதிப்பும் கௌரவமும் கிடைத்திருக்குமா என்று எண்ணி இறுமாந்தாள்.

ஒருநாள் ஊரிலிருந்து மங்களத்தின் தந்தையும், தமையனும் மங்களத்தின் வீட்டுக்கு வந்திருந்தார்கள். அந்தச் சமயம் கைலாசம் கச்சேரிக்காகக் கல்கத்தாவுக்குச் சென்றிருந்தான்.

"அப்பா! அவர் கல்கத்தாவுக்குச் சென்றிருக்கிறார். அனேகமாய் நாளை மறுதினம் காலை விமானத்தில் வந்து விடுவார்" என்றாள் மங்களம் பெருமையுடன்.

"உனக்கென்ன மங்களம்? பெரிய சங்கீத வித்வானின் மனைவி நீ!" என்று பரிகாசம் செய்தார் தந்தை.

"மங்களம்! ஒரு முக்கியமான விஷயம். என் பெண் குந்தளாவின் கல்யாண விஷயமாய் ஒரு பிள்ளையைப் பார்த்திருக்கிறேன். அது விஷயமாய் நம் மாப்பிள்ளையையும் உடன் அழைத்துக் கொண்டு கோயமுத்தூர் செல்ல வேண்டும். அதற்காகத்தான் நானும் அப்பாவும் இங்கே வந்திருக்கிறோம்" என்றான் மங்களத்தின் தமையன்.

"அதற்கென்ன அண்ணா! அவரை அழைத்துக் கொண்டு போங்களேன்!" என்றாள் மங்களம் மகிழ்ச்சியுடன்.

கைலாசம் கல்கத்தாவிலிருந்து திரும்பினான். வீட்டில் நுழைந்ததும் நுழையாததுமாய், "மங்களம், சீக்கிரம்! இன்று பிற்பகல் காரில் புதுச்சேரிக்குச் செல்ல வேண்டும். அங்கு ஒரு கச்சேரி. அதை முடித்துக் கொண்டு திருச்சி, அப்புறம் மதுரை போகவேண்டும்....." என்று கூறிப் பறந்தான் அவன்.

"அதோ அப்பாவும் அண்ணாவும் ஊரிலிருந்து வந்திருக்கிறார்களே! பார்த்துப் பேச வேண்டாமா?" என்றாள் மங்களம்.

"நீதான் இருக்கிறாயே. பார்த்துக் கொள்ளேன். எனக்கு ஏது நேரம்? உனக்குத் தெரியாதா?" என்றான் கைலாசம்.

கைலாசம் காட்டிய பரபரப்பில் மங்களத்தின் தமையனும் தந்தையும், தாங்கள் வந்த காரியத்தைக் கூறக்கூட விரும்பாமல் சும்மா இருந்து விட்டனர்.

தன் தமையனின் மனம் வேதனைப்பட்டதை உணர்ந்து கலங்கினாள் மங்களம்.

"சரி, அம்மா! நாங்கள் போய் வருகிறோம்" என்று கூறிவிட்டுச் சற்று ரகசியமாக மங்களத்தின் தந்தை, "குழந்தை! நீ ஸ்நானம் செய்து கொண்டிருக்கிறாயா?" என்று கேட்டார்.

இந்தக் கேள்வி மங்களத்தை ஒரு தாக்குத் தாக்கியது. எனினும் சட்டென்று சமாளித்துக் கொண்டு, "அப்பா! அதற்கென்ன அவசரம்?" என்றாள். அவளுடைய குரலில் கண்ட ஏக்கத்தைத் தந்தை உணரவில்லை.

"சார், தந்தி!"

'தந்தி' என்றதும் பறந்துகொண்டு போய் வாசலுக்குச் சென்று தந்தியைப் பெறும் மங்களம் அன்று அலுப்பும் ஆத்திரமும் கொண்டு தந்தியை வாங்கினாள்.

ஒரு கல்யாணக் கச்சேரிக்கு அழைப்பு. சன்மானம் ஐநூறு! 'சீ! என்ன கச்சேரி வேண்டியிருக்கிறது! ஓர் இளம் பெண்ணைத் தனிமையிலே தவிக்க விட்டு விட்டுக் 'கச்சேரி! கச்சேரி' என்று ஊர் ஊராய்ச் சுற்றிக்கொண்டிருக்கிறார்.' தந்தியை அலட்சியமாக வீசி எறிந்தாள் மேஜையின்மீது.

போனில் ஒரு தூரக் அழைப்பு. ஹைதராபாத்திலிருந்து யாரோ அவன் வரவைக் கச்சேரிக்காக விசாரித்தார்கள்.

"அவர் ஊரிலேயே இல்லை. வர ஒரு வாரம் ஆகும்" என்று எரிச்சலுடன் ரிஸீவரை வைத்தாள் 'டக்' கென்று.

தந்தை கேட்ட கேள்வி அவள் உள்ளத்தை ரம்பம் போல் அறுத்தது. எதிர்வீட்டு ஜானகி தனக்குப் பிறகு கல்யாணம் செய்து கொண்டவள். இன்று ஒரு குழந்தைக்குத் தாயாகி விட்டாள். இன்னொன்றைச் சுமக்கிறாள்! தன் குழந்தையுடன் அவள் கொஞ்சும்போது, உலகத்தையே மறந்து விடுகிறாளே! அன்றொரு நாள் ஜன்னல் வழியாய் அவள் எதிர்வீட்டில் கண்ட காட்சி, அன்று பரிகாசமாய்க் கருதிய அக் காட்சி — இன்று ஏன் இந்த ஏக்கத்தைத் தருவிக்கிறது, தன் எண்ணத்திலே தோன்றி!

தன் குழந்தையுடன் ஜானகி கொஞ்சுகிறாள். பின்னிலிருந்து அவளுடைய கணவன் தன் இரு கைகளால் ஜானகியின் கண்களைப் பொத்துகிறான்.





# காலம்கடந்த ஆசி

எஸ். ரங்கநாயகி

அன்று தோதவர் வாழ்ந்த கக்கூடி மந்துவில் ஒரே கோலாகலம். மந்துவிலுள்ளோர் அனைவரும் ஆடினர், பாடினர். மந்துவின் தலைவன் 'பியின்ட்டா' யாவரையும் முகத்துடன் வரவேற்றான். மந்துவின் தலைவனை 'பியின்ட்டா' என்பார்கள். ஒரு ஆண் மகனுக்குத் தந்தையாகி விட்டோம் என்ற பெருமிதத்தில் அவன் பூரிப்பில் ஆழ்ந்திருந்தான்.

பெண்கள் 'பூத்துக்குளி' என்னும் தங்கள் ஆடையை உடலில் சுற்றிக்கொண்டு நான்கு புறமும் நிரம்பிவிட்டனர். இன்றைய விழாவுக்கெனவே தங்கள் பூத்துக்குளியில் வித விதமான பூக்கள் வைத்துத் தயாரித்துக் கொண்டிருந்தனர் அவர்கள்.

குழந்தை பிறந்து மூன்று அமாவாசைகள் கழிந்து விட்டன. குழந்தைக்கு நீராட்டிக் கோவிலுக்கு எடுத்துச் சென்றுவிட்டுத் திரும்பி வந்து தாத்தாவின் மடியில் குழந்தையை விட்டனர். தாத்தா குழந்தையைத் தூக்கி முத்தமிட்டு விட்டு அதைக் கொஞ்சி மங்கே தோடா என்று செல்லமாகப் பெயர் வைத்தார். பெயரின் முடிவில் 'தோடா' என்று வைத்துக் கொள்வது அவர்கள் வழக்கம்.

மீண்டும் பாட்டுக்கள் இளம் பின. சுற்றி நின்று நாட்டியமாடினர். மந்துவின் பியின்ட்டா 'லட்டாத்தோடா அனைவருக்கும் விருந்து அளித்தான். விருந்தில் அனைவரும் பங்கு கொண்ட பிறகு தங்கள் தங்கள் மந்துவை நோக்கித் திரும்பி விட்டனர்.

மங்கேதோடா நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான். பித்து அவனுக்கு எருமைப் பாலையும், வெண்ணெயையும் நிறையக் கொடுத்தான். மகனைக் கவனிக்கும் நேரத்தில் மற்ற வேலைகளைக் கவனிக்க அவனுக்கு நேரம் இருக்கவில்லை. பூத்துக்குளியில் பூ தைக்கும் வேலையை கூட அவன் மறந்து விட்டான்.

லட்டாத்தோடாவுக்கு மகன் பிறந்ததுமே ஒரு விருப்பம் உண்டாயிற்று. தற்கால நாகரிகப்படி மகனுக்கு எழுதப் படிக்கக் கற்றுத்தர வேண்டும். தோதவர்களின் மந்துவை எவ்வளவோ பேர்கள் பார்க்க வருகிறார்கள். அவர்களோடு அவன் தமிழிலும் ஆங்கிலத்திலும் பேச வேண்டும், மந்துவிலுள்ளோர் வியக்க வேண்டும் என்றெல்லாம் விரும்பினான். லட்டாத் தோடாவின் தந்தைக்கு இதிலெல்லாம் விருப்பமில்லை. 'பேரன் தோதவர்களின் வழக்கப்படிதான் இருந்துவிட்டுப் போகட்டுமே' என்று நினைத்தான். ஆனால் லட்டாத் தோடா தன் தந்தையின் வார்த்தைக்குச் செவி சாய்க்கவில்லை. மகன் தமிழும், ஆங்கிலமும் கற்க ஏற்பாடு செய்தான்.

தோதவர் கூட்டத்தில் மங்கேதோடா ஒரு தனி விளக்காக விளங்கினான். வெகு சீக்கிரத்தில் ஆங்கிலமும், தமிழும் கற்றுக்கொண்டான். தோதவர் வாழும் பிரதேசத்தையும், மந்துவையும் காண வரும் அந்நியர்களிடம் மிகவும் சரளமாகப் பேசினான். வருபவர்களை மந்துவின் தந்தை உள்ளே அழைத்துச் சென்று இன்னையில் உட்கார வைத்துப் பாலும், வெண்ணெயும் உபசரித்தான்.

லட்டாத்தோடாவுக்கும் பெருமை பிடிபடவில்லை. மகன் எவ்வளவு புத்திசாலி! அருமை மகன் மற்றவர்களை உபசரிக்கும் பண்பைக் கண்டு பித்து வியந்தாள். மங்கே தோடாவுக்குப் பிறகு அவனுக்கு வேறு குழந்தைகள் பிறக்கவில்லை. இதோ, மங்கேதோடா இருபது வயதுக் காளையாகி விட்டான்.

அன்று லட்டாத்தோடாவின் தந்தை இறந்துவிட்டான். தோதவர் வழக்கப்படி வாயில் பொன் துண்டையும் பாலையும் போட்டுவிட்டு எரிப்பதற்கான ஏற்பாடுகள் ஆரம்பித்தன. பணப்பசையுள்ள அவனுடைய மயானச் சடங்கு விரிவாக நடந்தது.

அந் நேரத்தில் மங்கேதோடாவின் மனத்தில் இக் காட்சிகள் சற்று அருவருப்பைத் தோற்றி வைத்தன. யாவும் அநாகரிகமாகப் புலப்பட்டன. இறந்தவனை அமைதியாகச் சுவர்க்கம் சேர இவர்கள் விடமாட்டார்கள் போலிருக்கிறதே என்று அவன் எண்ணினான்.

மயானத்திலிருந்து மந்துவுக்குத் திரும்பிய போது 'லட்டாத்தோடா களைத்துவிட்டான். அப்பொழுதுதான் தன் மகன் மங்கேதோடா

விட்டு விட்டு மந்துவின் தலைமைப் பதவியை ஏற்க வேண்டும் என்பது உன் தந்தையின் விருப்பம். புரிந்ததா?'' — பிந்து கூறிக் கொண்டே சென்றாள்.

''அம்மா! வேண்டாம். தயவுசெய்து வேலையை விடச் சொல்லாதீர்கள். எனக்கு அவ்வேலை பிடித்திருக்கிறது.''

''அப்படியானால் உன் மனைவி உன்னோடு வரச் சம்மதப்பட வேண்டுமே!''

''அம்மா...!''

''ஏன், என்ன?''

''என்னை மன்னித்து விடும்மா. நான் பாலின் அருமை மகள் செல்லாவிடம் காதல் கொண்டு விட்டேன். அவளும் தோதவன் என்று அலட்சியம் செய்யாமல் என்னையே நேசிக்கிறாள்'' என்று தன் மனத்திலுள்ளதை எப்படியோ தாயிடம் கூறி விட்டான் மங்கேதோடா.

பிந்துவின் தலையில் திடீரென கனத்த பாரம் ஏறியது. ''என்ன, என்ன சொன்னாய்?''

மங்கேதோடா பதில் கூறவில்லை. தலை குனிந்த வண்ணம் இருந்தான். ''மங்கேதோடா! என்ன காரியம் செய்துவிட்டாய் நீ? உன் தந்தை இதைக் கேட்டால் கோபக் கனலாக எரிந்து விடுவாரே! எங்கள் வயிற்றில் பிறந்த நீ எங்கள் விருப்பப்படி நடப்பாய் என்று நாங்கள் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தோமே. தோதவப் பெண்களில் உனக்குப் பிடித்தவளை நீ விவாகம் செய்துகொள்ளலாம்...'' என்று ஏதேதோ கூறிக் கொண்டே போனாள் பிந்து.

''அம்மா! நீ என் தாயல்லவா? என்னை வற்புறுத்தாதே. நீ செல்லாவை அறிய மாட்டாய். தோதவர்கள் மீது அவளுக்குப் பற்றுதல் அதிகம்.'' மங்கேதோடா தாயைச் சமாதானப்படுத்தும் முயற்சியிலீடுபட்டான்.

''மங்கேதோடா, மேலே பேசாதே. உன் இஷ்டப்படி நடப்பதுதான் ஆண்டவனின் விருப்பமானால் அப்படியே நடக்கட்டும். ஆனால் ஒரு வார்த்தை மட்டும் சொல்கிறேன். நீ மீண்டும் இங்கு வராதே. உன் தந்தை புலியாக மாறி விடுவார்!''

''அம்மா! உன்னைப் பார்க்காமல் இருக்கச் சொல்கிறாயா? மகனைப் பார்க்க உன் மனம் ஆவல் அடையாதா?'' மங்கே தோடா திடுக்கிட்டுக் கேட்டான்.

ஆழமாக மகனின் பிம்பம் இதயத்தில் பதிந்து விட்டபிறகு, அவனைக் காணாமலே அவளால் வாழ முடியும் என்பது அவனுக்குத் தெரியும். ஆனால் படிப்பற்ற அவளுக்கு வகையாக அதை மகனிடம் எடுத்துக் கூறத் தெரியவில்லை.

என்னென்னவோ கூறி அவனைச் சமாதானம் செய்து அனுப்பினாள். அவன் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றான். கண்களில் நீர் நிறைந்திருந்தது. அவன் சென்றதும் பிந்துவுக்குத் தொண்டையை அடைத்தது. மயக்கமாகப் படுத்து விட்டாள்.

காலச் சுழலில் மேலும் இரண்டாண்டுகள் மெதுவாகக் கழிந்தன. மகனைக் காணாமல் வட்டா தோடா அதிசயித்து நின்றான். காரணம் புரியாத நிலையில் அவன் இருந்தான். காரணம் புரிந்திருந்தவளோ மகன் வராத காரணத்தைத் தன் ஆளிடம் எப்படிக் கூறுவது என்று தவித்து நின்றாள். தானே நேராகச் சென்று அவனைச் சந்தித்து விட்டு வருவதாக வட்டாத்தோடா கிளம்பிய போது, மகன் வராத காரணத்தைக் கூறும்படியான



அவசியம், பிந்துவுக்கு ஏற்பட்டது. டீ எஸ்டேட்டுக்குச் சென்று மகனின் நிலையைப்புரிந்து கொண்டால் லட்டாத்தோடா எஸ்டேட்டையே ஒரு கலக்கு கலக்கி விடுவான் என்பதை அவள் அறிவாள். அதனால் அவன் கோபத்தை மந்துவிலேயே காட்டிக் கொள்ளட்டும். மகன் மானமாக எங்கேயாவது பிழைத்துக் கொள்ளட்டும் என அவள் தாயுள்ளம் நினைத்தது.

"மங்கேதோடாவை நான் இனி இங்கே வரவேண்டாமெனக் கூறி விட்டேன். அவனுக்கு அங்கேயே விவாகம் முடிந்துவிட்டது." மெதுவாக மென்று விழுங்கி அவள் இதை ஒவ்வொரு வார்த்தையாகக் கூறினாள்.

லட்டாத் தோடா சடக்கெனத் திரும்பி அவளைக் கூர்மையாக நோக்கினான். அவ்விருவர்களின் நிலை சிங்கமும் ஆடும் இருக்க நிலையில் இருந்தது.

லட்டாத்தோடா சில நாட்கள் உறுமிவிட்டுப் பிறகு சற்று ஓய்ந்தான். ஆனால் மகனைப் பற்றிய நினைவு ஏதேனும் தோன்றினால் காற்றுப்பட்ட நெருப்பாகக் கிளம்பிவிடுவான். மகனைச் சந்திக்கவும் அவன் விரும்பவில்லை.

சில காலம் சென்றது. லட்டா தோடா கோவிலிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த போது தன் மந்துவின் வாசலில் நின்றிருந்தவரைப் பார்த்ததும் திடுக்கிட்டு நின்றுவிட்டான். பற்களை நறநறவெனக் கடித்தான். பிந்துவுக்கு அவனோடு என்ன பேச்சு!

தந்தையைப் பார்த்ததும், தாயோடு பேசிக் கொண்டிருந்த மங்கேதோடா ஓடோடி வந்தான். அவன் கையில் அழகானதொரு குழந்தை இருந்தது.

மங்கேதோடா தந்தையை வணங்கிவிட்டு, பிறகு தோதவ பாஷையில் குதூகலத்துடன் பேசினான். "அப்பா, இதோ பார்த்தீர்களா? இவன்தான் உங்கள் அருமைப் பேரன். உங்கள் ஆசி பெற்றுப் போக வந்திருக்கிறான்." குழந்தையைத் தந்தையின் கையில் கொடுக்கப் போனான் மங்கேதோடா.

லட்டாத் தோடா ஆத்திரத்துடன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். "நீயும் வேண்டாம், உன் குழந்தையும் வேண்டாம்."

மங்கேதோடாவின் முகம் சுருங்கியது. "அப்பா! நீங்களா இப்படிக் கூறுகிறீர்கள்? உங்கள் மகனுக்குப் பிறந்த குழந்தைமீது உங்களுக்கு ஆசையில்லையா? பாசம் இல்லையா?" தந்தையின் முன்னே தழைந்து கொடுத்துக் கெஞ்சினான் மகன்.

தந்தையின் உள்ளம் இரும்பாக மாறியது. அதில் நெருப்புப்பட்டு இளகியது. உருகி ஓடும் நிலைக்கு அது வரவில்லை. "மகன்! யாரடா எனக்கு மகன்? எனக்கு மகனே பிறக்கவில்லை. நீ போய்விடு. நீ துரோகி, வஞ்சகன்."

மங்கேதோடாவின் முகம் சிவந்தது. தந்தை என்ற பாசம் வைத்து அருமை மகனைக் காட்ட வந்திருக்கிறான் அவன். தந்தையின் ஆசி பெற்றால் தன் மகனுக்கு, சின்னஞ் சிறு குழந்தைக்கும் பூரண நிறைவு காணும் என்று நம்பிக்கையுடன் அவன் வந்திருக்கிறான். மகனின் நல்வாழ்வில் அவனுக்கும் பாசமும் பொறுப்பும் இருந்தது போல், அவன் தந்தைக்குத் தன் மைந்தனிடம் அன்பும் பாசமும் இருக்காமல் எங்கு போய்விட்டது!

பிந்து பிரளயத்தை எதிர் நோக்கித் தவித்து நின்றாள். கணவனுக்குப் பரிந்தால் மகனின் மனம் துடிக்கும். மகனுக்குப் பரிந்தால் கணவனின் கோபத்துக்கு இலக்காக நேரிடும்.

"மங்கேதோடா!" மெதுவாக மைந்தனின் அருகே வந்தாள் பிந்து.

லட்டாத்தோடா அவள் அருகில் பாய்ந்து அவளைப் பிடித்து மறுபுறம் தள்ளினான். "ஏ பிந்து! எதற்காக அவன் அருகில் வருகிறாய்? அவனை மறந்துவிடு நீ! பிஞ்சு முகத்தைக் காட்டி மயக்க வந்துவிட்டான் அவன். நீ உருகி விட்டாய்." இரைந்து கத்தினான் லட்டாத் தோடா.

தாயின் சோகபிம்பம் மகனின் மனத்தைச் சற்றுக் கரைத்தது. தன் கோபத்தையெல்லாம் ஒருங்கே சேர்த்துப் பாசத்தில் மூழ்கடித்தான். தன்னை ஈன்ற அன்னையின் பொருட்டுத் தந்தையிடம் மீண்டும் பணிவாகப் பேசினான்.

"அப்பா! கடந்த காலத்தை மறந்து விடுங்கள். இவன் உங்கள் அருமைப் பேரன் என்பதை மட்டும் மனத்தில் இருத்தி இவனுக்கு ஆசி கொடுங்கள். இவனும் உங்களை நோக்கிச் சிரிக்கிறான், பாருங்கள்."

"முடியாது. என் வாயினால் ஒரு நல்ல வார்த்தைகூட உன் குழந்தையின் பொருட்டு வெளிவராது. நீ போ, போய்விடு" என்று கூறிய லட்டாத்தோடா, கன வேகமாகத் திரும்பினான். பிந்துவைத் தரதரவென்று இழுத்துக்கொண்டு தன் மந்துவினுள் சென்று மறைந்துவிட்டான்.

குழந்தையை அணைத்தபடி விசுக்கெனத் திரும்பினான் மங்கே தோடா. எண்ணப் போராட்டத்தில் சிக்கியபடி, கால் போன போக்கில் தன் வழியே நடந்து தன் இல்லத்தை அடைந்தான் மங்கேதோடா.

காலச் சிலந்தி தன் வலையைப் பின்னிக் கொண்டே சென்றது. அதில் எவ்வளவோ மாறுதல்கள். இருபது வருடங்கள் கண்ணெதிரே ஓடி மறைந்து விட்டன.

லட்டாத்தோடா மந்துவின் தலைமைப் பதவியை விட்டு விட்டான். வயது தன் படிகளில் ஏறிச் சென்றபோது அவனைத் தளர்த்தி உருக்குலையச் செய்து இழுத்துச் சென்றது. மைந்தனை விரட்டி அனுப்பியதிலிருந்து அவன் மனத்திலும் ஒரு தளர்ச்சி ஏற்பட்டது. ஆனால் ஆணாகப் பிறந்த அவனுக்கு ஆணவம் மட்டும் குறையவில்லை. மங்கேதோடா ஒரு முறை வந்தபோதுகூட அவனோடு பேசவில்லை.

பிந்துவின் நிலையை விவரிக்கத் தேவையில்லை. வீட்டு வேலைகளையே அவளால் சரியாகச் செய்ய முடியவில்லை. தன் கணவனை கவனித்து அவனுக்குத் தகுந்தபடி நடந்து கொண்ட நேரத்தில் தன் மகனையும் அவளால் மறக்க முடியவில்லை. தன் பேரனைப் பார்க்கவேண்டுமென்ற அவா. ஆயின் சந்திக்க முடியவில்லை.

தோதவர் கூட்டத்தில் நாகரிகப் பண்பாடுகள் பல தோன்றின. ஆனால் லட்டாத் தோடா மட்டும் இன்னமும் பழைய பண்பாட்டை விடவில்லை. விறகு வெட்டுவர இப்பொழுதும் சுற்றுப்புறக் காடுகளுக்கு அவனேதான் செல்வான்.

அன்றும் லட்டாத்தோடா விறகு வெட்டச் சென்றிருந்தான். அவன் புறப்பட்டுச் சென்று

அவன் இன்னொரு நாள் கண்டிப்பாக வருவதாகக் கூறிவிட்டுச் சென்றான்.

பிந்து, தளர்வுடன் படுத்திருந்த தன் கணவனிடம் சென்றாள். குதூகலம் பொங்க அவனைக் காப்பாற்றியவன் மங்கே தோடாவின் மகன் அருள் என்று கூறினாள்.

வட்டாத் தோடா மௌனமாக இருந்தான்.

"போனது போகட்டும். அருள் மீண்டும் வருவான். அவனுக்கு நீங்கள் ஆசி வழங்க வேண்டும்" என்று பிந்து கூறினாள்.

"என்ன! என்ன சொன்னாய்! என்னை மதியாத மகனின் புதல்வனுக்கு என் ஆசிகளா? முடியவே முடியாது" என்று வட்டா தோடா உறுமினான்.

"அவன் உங்கள் உயிரைக் காப்பாற்றியவன் என்பது நினைவிருக்கட்டும்." பிந்துவும் நன்றாக சண்டையிடுவதெனத் தீர்மானித்துவிட்டாள்.

"ஆனால் அவன் நன்றி கெட்ட மங்கே தோடாவின் மகன்."

பலத்த வாக்குவாதங்களுக்கும், வாதப் பிரதிவாதங்களுக்கும் பிறகு பிந்து வெற்றி பெற்றாள். அருள் மீண்டும் வரும்போது அவனுக்குத் தன் ஆசியை வழங்க ஒப்புக் கொண்டான் வட்டாத் தோடா.

நாட்கள் மெதுவாக முன்னேறிச் சென்றன. அருளைத் தினம் எதிர்பார்த்தாள் பிந்து. ஒருகால் வராமலிருந்து விடுவானோ!

கடைசியில் ஒரு நாள் வந்து விட்டான் அருள். அவன் முகத்தில் பீதி காணப்பட்டது. ஆனால் அதை அவன் மறைக்க முயன்றான். "பாட்டி, நீ வரச் சொன்னாயே, வந்து விட்டேன்" என்று கூறிக் கொண்டே மந்துவினுள் புகுந்து விட்டான்.

பிந்து அன்புடன் அவனை அணைத்துக் கொண்டாள். பாலும் வெண்ணெயும் தந்து உபசரித்தாள். பிறகு தன் கணவனிடம் அழைத்துச் சென்று, "இதோ பார்த்தீர்களா? அருள் வந்து விட்டான். ஆசிர்வதித்து விடுங்கள். தாத்தாவின் ஆசிகள் குழந்தைக்குக் கிடைக்கட்டும்" என்று அவள் கூறினாள்.

வட்டாத் தோடா வாய் திறக்குமுன் வாசலில் "அம்மா!" என்ற குரல் கேட்டது. அங்கே அவன் மகன் மங்கே தோடா நின்று கொண்டிருந்தான்.

அருளின் முகம் வெளிறியது.

பிந்து மகனிடம் குதூகலத்துடன் ஓடினாள். "வாடாப்பா மகனே! அருள் உன் அப்பாவிடம் ஆசி பெற வந்திருக்கிறான். நீயும் சமயத்துக்கு வந்துவிட்டாய்."

"அம்மா, அப்பா அவனுக்கு ஆசி கூறுவதற்குள் நான் வந்தது நல்லதாகி விட்டது. அப்பாவின் ஆசி அவனுக்கு அவசியமில்லை."

"ஐயோ மகனே, நீயா இப்படிக் கூறுகிறாய்? உன் தந்தை எப்பொழுதோ தவறு செய்திருந்தால் அதை நீ நினைப்பது அழகல்ல." பிந்து சற்றுத் துயரமும் கோபமும் கலந்து கூறினாள்.

"அதற்காகச் சொல்லவில்லை, அம்மா. அருள் போக்கிரி, திருடன், சமூக விரோதி, அப்பாவைப் போன்ற பெரியவர்களின் ஆசி இவனைப் போன்ற துஷ்டர்களுக்கு உபயோகப் படக் கூடாது."

பிந்துவுக்கு அவன் வார்த்தைகள் பேரிடி போல் காணப்பட்டன. பேரனை நோக்கினாள். அவன் தலை குனிந்து நின்றான். கணவன் முகத்தை நோக்கினாள். அவன் திகைப்பில் மூழ்கியிருந்தான்; மகனை நோக்கினாள்; அவன் கம்பீரமாக நின்றான்.

"மங்கேதோடா! உன் தந்தையை வன விலங்குகளிலிருந்து காப்பாற்றியவன் அருள்." பிந்து கூறினாள்.

"தெரியும். தன் ஆயுளில் அவன் அந்த ஒரு நல்ல காரியம் செய்தது, அவனது குழந்தைப் பருவத்தில் நீ கொடுத்த ஆசியின் பலனாக இருக்கலாம். ஆனால் அவன் சுபாவத்தில் புத்தி கெட்டவன். என் மகனாக அவன் பிறந்தது நான் செய்த அபாக்கியம். படிப்புக்கும் அவனுக்கும் சம்பந்தமில்லை. துஷ்ட சகவாசம், பெரியோர்கள் வார்த்தையைக் கேட்பதில்லை... அம்மா, உண்மையாக இன்று அப்பாவின் ஆசி பெற அவன் வரவில்லை. ஒரு எஸ்டேட்டின் பணத்தைக் கையாடி விட்டு, அங்கு சிப்பந்திகளிடையே குழப்பத்தை ஏற்படுத்தி விட்டுத் தலைமறைவாக ஓடி வந்து விட்டிருக்கிறான். இங்குதான் இருப்பான் என்று நான் சந்தேகித்தேன். என் ஊகம் சரியாகி விட்டது. சட்டத்தில் இனி அவன் பிடிபட்டு விடுவான்" என்று கூறிய மங்கேதோடா, மகனின் அருகில் சென்று அவனை எங்கும் ஓடிவிடாதபடி கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

"ஐயோ, மங்கே! இது என்ன அநியாயமடா? எந்த மகனுக்கு ஆசி வேண்டும் என்று துடிதுடித்தாயோ அவனுக்கா இந்தக் கதி? அன்று உன் அப்பா உன்னை உதறித் தள்ளியது போல் இன்று நீ உன் மகனை உதறித் தள்ளுகிறாயே!" பிந்து புலம்பினாள்.

"அம்மா! அப்பா அன்று குலத்தையும், ஜாதியையும் உயர்வாக எண்ணி என்னை உதறித் தள்ளினார். நானோ குலத்தை மதிக்கவில்லை, ஜாதியை மதிக்கவில்லை. மனிதனை மதிக்கிறேன். ஆசி பெற நான் அருளை அழைத்து வந்தபோது அவன் உலகம் தெரியாத குழந்தை. என் மகனை நான் உயர்வாக மதித்தேன். இன்றோ சமூகத் துரோகியாகி விட்ட அவனைத் துச்சமாக மதிக்கிறேன். பாசத்துக்கும் அன்புக்கும் ஒருபடி உயர்ந்தது மனிதத்தன்மை. நான் அதைத்தான் மதிக்கிறேன். ஜாதிகுலம், பாசம், அன்பு முதலியவைகளை மறந்தவனைச் சமூகம் மன்னிக்கலாம். ஆனால் மனிதத் தன்மையை மறந்தவனை மன்னிக்கவே முடியாது..." மங்கேதோடா இவ்விதம் கூறிவிட்டுத் துப்பாக்கி முனையில் மகனை அழைத்துக்கொண்டு கிளம்பிவிட்டான்.

"மங்கே, நில். உன் தந்தை கொடுக்கச் சம்மதித்த ஆசிகளையாவது அருள் பெறட்டும்" பிந்து கண்ணீருடன் கூறினாள்.

"அவசியமில்லை, அம்மா! காலங்கடந்த ஆசிகள் இவை. ஒருகால் இவனது குழந்தைப் பருவத்தில் அப்பா ஆசிகள் அளித்திருந்தால், அதன் மகத்துவத்தின் காரணமாக இவன் நல்ல பையனாக வளர்ந்திருக்கலாம். அக்காலம் கடந்து விட்டது. இப்பொழுது இந்தச் சமூகத் துரோகிக்குப் பெரியோர்களின் ஆசி பயன்படாது. இத் துஷ்டனின் உடலை வளர்க்கப் பெரியோர்களின் ஆசி பயன்படவும் கூடாது..." என்று கூறிய மங்கேதோடா அருளை இழுத்துக்கொண்டு சென்றுவிட்டான்.

பண்பில் உயர்ந்த மகனைப் பார்த்தபடியே நின்றுவிட்டான் வட்டாத்தோடா.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk Madras-10
Managing Editor, T. Sadasivam

# வாராய், புது வாழ்வே!



உதயம் பிறந்த ஒலி, புதுமை விழிப்பினொலி கேட்கிலையோ ?
புதிதே பிறந்ததொரு மதலை இசைக்குமொலி கேட்கிலையோ ?
அதனைக் கேட்டெழுவார் ஆக்கப் பணிபுரிவார் கோடிமக்கள்
கதிரோன் சக்தியையும் கவரும் தவத்தினரைக் காண்கிலையோ?

இன்னல்கள் ஓரளவு குறைய மேலும், ஓரளவே
இன்பங்கள் மேலும் பெருகிடவும் உழைக்கின்றார் ;
பொன்னான புத்துலகம் நிறுவுமவர் தவத்தாலே
நம்நாடு எழிலான புதுமையினைக் காண்கிலையோ !

இன்று,— எக்காலமும்போலவே எமது தயாரிப்புக்கள் வீடுதோறும் ஒளி துலங்க, உடல் நலமோங்க, இன்பமிலங்க உதவுகின்றன; இதே சமயம் எமது ஊழியத்தின் இலட்சியமாக முன்னிற்பது...

நாளை,— நாளொரு மேனியாக வளரும் நல்வாழ்வு வேட்கை மேலும் மேலும் புதுப் புது முயற்சிகளை ஊக்குவிக்கப்போகும் காலம்; அதன் வழியே வளரும் புதுப் புது எண்ணங்கள் புதுப் புதுப் பண்டங்களோடு பரந்த முறையில் சிறந்த பணி புரிந்திடச் சித்தமாயிருக்கிறோம்...

**இன்றும், என்றும்... இல்லம் தோறும் நல்வாழ்வளிப்பது இந்துஸ்தான் லீவர் பணி.**

PR. 2-50 TM

